# கல்கி

KALKI 31.5.92 ரூ. 3.00
பொன்விழா ஆண்டு

கடலூர் விஸிட் :
சிறப்புச் செய்திகள்

# கர்நாடகாவில் ஒரு குட்டி திபெத்!



# 'டென்ஷன்' உருவாக்கிய டெக்ஸாஸ் குப்புசாமி!



சமீபத்தில் கோவையில் நடந்த விமான நிலைய விரிவாக்க விழாவில், எடுத்தவுடன் முதல்வர் ஜெயலலிதாவைக் குறிப்பிடாமல், தலைமை வகித்த மத்திய அமைச்சர் சிந்தியாவைக் குறிப்பிட்டதால், அ.இ.அ.தி.மு.க. தொண்டர்களின் எரிச்சலுக்கு ஆளானார் பாராளுமன்ற உறுப்பினர் சி.கே. குப்புசாமி. எதிர்ப்புக் குரல்களுக்குச் சிறிதும் அஞ்சாமல் இருந்தார் அவர். இதன் தொடர்பாகக் குப்புசாமியின் கார் அ.இ.அ.தி.மு.க.வினரால் தாக்கப்பட்டது. தமிழக அரசியலில் ஒரு பரபரப்பை உண்டாக்கிய இந்தக் குப்புசாமி யார்?

கோவை மாவட்டம் பல்லடம் தாலுக்காவில் உள்ள சந்திராபுரம்தான் குப்புசாமியின் சொந்த ஊர். அப்பா கருப்புசாமிக் கவுண்டர். விவசாயக் குடும்பம் என்றாலும் குப்புசாமி காவல் துறையில் சேர்ந்து பத்து வருடங்கள் போலீஸ்காரராகப் பணியாற்றியிருக்கிறார். பின்னர் ராஜினாமா செய்துவிட்டு, பனியன் தொழிலில் இறங்கினார். இதனால் இவர் பெயர் 'டெக்ஸாஸ்' குப்புசாமி என்று பிரபலமாயிற்று. அறுபது வயதாகும் குப்புசாமி பள்ளி இறுதி வகுப்பு வரைதான் படித்திருக்கிறார்.

சிறு வயதிலிருந்தே சிவாஜி ரசிகர் குப்புசாமி. 1984 - ல் சிவாஜி ரசிகர் மன்றத்துக்கென பாராளுமன்ற ஸீட்கள் சில, காங்கிரஸில் ஒதுக்கப்பட்டபோது, சிவாஜியால் கோவை பாராளுமன்றத் தொகுதியில் நிறுத்தி வைக்கப்பட்டார். இப்போது மூன்றாவது முறையாக அதே தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.

விளைவுகளைப் பற்றிக் கவலைப்படாமல் தமக்கு நியாயம் என்று பட்டதைத் தைரியமாகப் பேசும் இயல்புடையவர். அதே சமயம் இரக்க சுபாவமும் உண்டு. மறைமலை நகரில் காங்கிரஸ் மாநாடு நடந்த போது வெயிலில் காய்ந்து கொண்டிருந்த பல போலீஸ்காரர்களுக்குக் குளிர் பானங்கள் வாங்கிக் கொடுத்து விட்டு, ''போலீஸ்காரரின் கஷ்டம் எனக்கு நன்றாகவே தெரியும். ஆவடியில் காங்கிரஸ் மாநாடு நடந்த போது நான் போலீஸ் அதிகாரி. பந்தோபஸ்துப் பணியில் அன்று இருந்தேன்'' என்று அவர்களுடன் பேசிக் கொண்டிருந்தார்.

சிவாஜி காங்கிரஸிலிருந்து விலகிச் சென்றவுடன், மூப்பனார் அணியுடன் சில காலம் ஒட்டிக் கொண்டிருந்தார். காங்கிரஸ் தனியாகச் சட்டமன்றத் தேர்தலில் போட்டியிட்டுத் தோற்றதும், மூப்பனாரைத் தாக்கி அறிக்கைவிட்டு, வாழப்பாடியாரின் முகாமில் இருந்தார். அப்போது சத்தியமூர்த்தி பவனில் நடந்த ஒரு கூட்டத்தில் மூப்பனார் ஆதரவாளர்களால் தாக்கப்பட்டார். மோதலில் சட்டை கிழிந்தது. இப்போது குப்புசாமி இருப்பது மூப்பனார் முகாமில்!

திருச்சியில் மத்திய அமைச்சர் சிதம்பரம் தாக்கப்பட்ட போது பாராளுமன்றத்தில் 'அ.தி.மு.க. அரசை டிஸ்மிஸ் செய்ய வேண்டும்' என்று குரல் கொடுத்தார் குப்புசாமி. இதனால் அ.தி.மு.க.வினர் விரோதத்தைச் சம்பாதித்துக் கொண்டார். அது இன்னமும் தொடர்கிறது.

கோவைச் சம்பவத்தைப் பெரிது படுத்தாமல் 'அமுக்கி' வாசிக்கும்படி தமிழக காங்கிரஸ் தலைமை கேட்டுக் கொண்டாலும் குப்புசாமி சும்மா இருக்க மாட்டார். அவரது இயல்பு அப்படி. ''தமிழகத்தில் காங்கிரஸ் தனித்துப் போராடி ஆட்சியைப் பிடிக்க வேண்டும்'' என்று டெல்லியிலிருந்து இவர் விட்டிருக்கும் அறிக்கை, உண்மையான காங்கிரஸ்காரர்கள் வரவேற்கும் ஒரு விஷயமாக இருந்தாலும், அ.தி.மு.க. அணைப்பில் சுகம் கண்டு கொண்டிருக்கும் வாழப்பாடியார் ஆதரவாளர்களுக்கு எரிச்சலை உண்டாக்கும். இதன் விளைவாக இன்னமும் சில மோதல்களை விரைவில் எதிர்பார்க்கலாம்.

- ப்ரியன்

படம் : ராஜன்



☛ துருப்பிடித்துக் கொண்டிருக்கும் துறைமுகம்



☛ கேப்டன் சண்முகம்

# துருப்பிடித்துக் கொண்டிருக்கும் துறைமுகம்

''ஒரு நாளைக்கு மூன்று கப்பல்கள் வந்தால் கூட எங்களால் சமாளிக்க முடியும். அந்த அளவுக்கு இங்கே வசதிகள் இருக்கின்றன'' என்கிறார் கடலூர்த் துறைமுகத்தின் போர்ட் ஆபீஸர் கேப்டன் சண்முகம். ஆனால், தினசரி இப்போது எத்தனை கப்பல்கள் வருகின்றன? ஒன்றுமில்லை. சரி! மாதத்துக்கு? ஊகூம். இதனால் துறைமுகத்தில் ஏற்றுமதி, இறக்குமதிக்கு உதவும் பொருட்டு உள்ள சரக்குக் கிடங்குகள், கப்பலிலிருந்து சரக்கு எடுத்துக் கொண்டு கரைக்கு வரத் தேவையான சரக்குப் படகுகள், எடை மேடை, சரக்கு ரயில் வசதி போன்றவை எல்லாம் கேட்பாரற்றுக் கிடக்கின்றன!

ஒரு கப்பலுக்கு நாலாயிரம் டன் என்ற கணக்கில் மூன்று கப்பல்களிலிருந்து சரக்கை இறக்கவோ, கப்பலுக்குச் சரக்கை ஏற்றவோ, கடலூர்த் துறைமுகத்தில் வசதிகள் இருந்தும் கூட இந்த நிலைமை என்றால், அதற்கு அரசின் மெத்தனப் போக்கைத் தவிர, வேறு எதனைக் காரணமாய்ச் சொல்வது?

தமிழ்நாட்டின் பெரிய துறைமுகங்களான சென்னையும், தூத்துக்குடியும் மத்திய அரசின் நேரடிப் பார்வையில் இருப்பதால், அங்கே வளர்ச்சி துரிதமாய் நடந்து விட்டது. ஆனால் நடுத்தரத் துறைமுகங்களான கடலூர் நாகப்பட்டினம் இரண்டும் மாநில அரசின் கட்டுப்பாட்டில்தான் வருகின்றன. இந்த இரண்டிலும், கடலூரின் நிலைமைதான் பரிதாபம்.

''மேட்டூர் அனல் மின் நிலையத்துக்குத் தேவையான நிலக்கரி தற்போது சென்னை துறைமுகத்துக்குக் கொண்டு வரப்பட்டு, அங்கிருந்து ரயிலில் மேட்டூரை அடைகிறது. ஆனால், இதற்கு அதிகச் செலவு பிடிக்கிறது என்று தமிழ்நாடு மின்சார வாரியம் கருதுவதால், கொச்சி துறைமுகத்தில், நிலக்கரியை இறக்குமதி செய்து, அங்கிருந்து ரயில் மூலம் மேட்டூர் கொண்டு செல்ல முடியுமா என்று பரிசீலித்து வருகிறது. அதற்குப் பதில் நிலக்கரியைக் கடலூர் துறைமுகத்தில் இறக்குமதி செய்து, மேட்டூருக்கு ரயிலில் கொண்டு செல்லலாமே'' என்கிறார் கேப்டன் சண்முகம்.

இது தவிர, தமிழக அரசு, தமிழ்நாட்டில் மின் உற்பத்திக்குத் தேவையான நிலக்கரியைத் தானே அயல்நாடுகளிலிருந்தும் இறக்குமதி செய்து கொள்ள முயற்சி செய்கிறது. அதற்கு அனுமதி கிடைக்கும் பட்சத்தில், கடலூர்த் துறைமுகம் மூலமாகவே நிலக்கரியை இறக்குமதி செய்து கொள்ளலாம். அதே போல தமிழ்நாட்டிலுள்ள சிமெண்ட் ஆலைகளுக்குத் தேவையான நிலக்கரியையும், கடலூர்த் துறைமுகம் மூலமாகவே இறக்குமதி செய்து கொண்டால் கடலூர்த் துறைமுகம் வளர்ச்சி பெற வாய்ப்புண்டு. அதே சமயம் மற்ற துறைமுகங்களில் நெரிசல் சற்றுக் குறையும்.

கடலூருக்கு அருகில் உள்ள புவனகிரி பகுதியில் கிடைக்கும் கச்சா எண்ணெய், சுத்திகரிப்புக்காக, சென்னையிலுள்ள மெட்ராஸ் ரிஃபைனரீஸ் நிறுவனத்துக்குச் சாலை வழியாகத்தான் அனுப்பப்படுகிறது. இதற்குப் பதிலாக, கடலூரிலிருந்து இவற்றைச் சிறு கப்பல்கள் மூலம் குறைந்த செலவிலேயே சென்னைக்குக் கொண்டு போகலாம்.

சுற்றுப்புற கிராமங்களில் வருடம் முழுக்க விவசாய வேலை இராது. எனவே ஏராளமான விவசாயக் கூலி வேலை பார்ப்பவர்கள் கப்பல்களில் சரக்குகளை ஏற்றி இறக்கக் கிடைப்பார்கள். சென்னை, மற்றும் தூத்துக்குடியை விட, கடலூரில் குறைந்த கூலிக்கே காரியத்தை முடிக்க முடியும்.

இவற்றையெல்லாம் மனத்தில் கொண்டு அரசு செயல்பட்டால் கடலூர்த் துறைமுகம் பளிச்சென்று முன்னேறும். இல்லையெனில் ஏற்கெனவே துரு ஏறிக் கொண்டிருக்கும் கடலூர்த் துறைமுகம், மேலும் பயனற்றுப் போய் விடும்.

## மீண்டும் சர்ச்சைக்குள்ளாகியிருக்கும் ''பல்லவா ஹோட்டல் கார்ப்பரேஷன்'' திட்டத்தின் சூத்திரதாரியான பழனி ஜி. பெரியசாமி கூறுகிறார் :

# ''என் திட்டத்தைத் திசை திருப்பப் பார்க்காதீர்கள்!''

''கல்கியில், 'மக்கள் : மன்னர்களா ஏமாளிகளா?' என்ற தலைப்பில் வெளியான கட்டுரை பார்த்தேன். என்னுடைய நட்சத்திர ஓட்டலுடன் இணைந்த உல்லாச உலகத்திட்டம் பற்றித் தவறான பிரசாரம் செய்யப்படுகிறது. நான் இன்னமும் சொல்லுகிறேன். அந்தத்திட்டம் மிக உன்னதமான ஒரு திட்டம். அதை நிறைவேற்றுவதால், சுற்றுப்புறச் சூழலுக்கு எந்த வித ஆபத்தும் ஏற்பட்டு விடாது. எப்படி என்று விளக்குகிறேன் :



பழனி ஜி. பெரியசாமி

''மொத்தம் சுமார் 225 கிரவுண்டு பரப்புள்ள அந்த இடத்தில், நட்சத்திர ஓட்டல் கட்டத் திட்டமிடப்பட்டுள்ளது, சுமார் நாற்பது கிரவுண்டு நிலத்தில்தான். அந்தப் பகுதியில் உள்ள மரங்களில் ஒன்றைக்கூட நாங்கள் வெட்டக்கூடாது என்பது அரசு ஆணை. எந்த ஒரு தவிர்க்க முடியாத காரணமாகவும் ஒருமரம் வெட்டப்பட்டாலும் கூட, அதை, அந்த வளாகத்திலேயே வேறு ஓர் இடத்தில் பெயர்த்து எடுத்துப் போய் நடவேண்டும் என்பது நிபந்தனை. அங்குள்ள குளத்தைத் தூர்க்கக்கூடாது. அரசாங்கத்திடமிருந்து பெறப்பட்ட இடம், எந்த விதத்திலாவது தவறான முறையில் பயன்படுத்தப்படுமானால், முப்பது நாள் நோட்டீஸ் கொடுத்து விட்டு, அரசாங்கம் நிலத்தைத் திரும்ப எடுத்துக் கொண்டு விடலாம். நிலத்தில், மேம்பாட்டுப்பணிகள் செய்யப்பட்டிருந்தாலும், அரசாங்கம் ஒரு பைசாக் கூட எங்களுக்கு நஷ்ட ஈடு தராது. இவ்வாறாகப் பல கடுமையான நிபந்தனைகளுடன்தான் அரசாங்கம் நிலத்தை எங்களுக்குக் கொடுத்தது.

''நிலத்தைப் பயன்படுத்த விதிமுறைகள் கடுமையாக இருப்பதால் நிலத்தைத் தவறாகப் பயன்படுத்த முடியாது. திட்டம் நிறைவேறும் போது அது மக்களுக்கு மட்டுமின்றி மாநிலத்தின் பொருளாதார வளர்ச்சிக்கும் உதவும் என்பதால் டூரிஸம் வளர்ச்சிக்காக நிலத்தை அரசு பயன்படுத்துவதாகக் கொள்ள வேண்டுமே தவிர, மார்க்கெட் மதிப்பு அதிகமான நிலத்தைக் குறைந்த விலைக்கு விற்று விட்டதாகக் கருதக் கூடாது.

''இந்தத் திட்டத்தில் அயல் நாட்டில் வாழும் 34 இந்தியர்களுடைய பங்கு 25 சதவீதம். அரசின் பங்கு 26 சதவீதம். இதை அரசு நிலமாக வழங்குகிறது. மீதி 49 சதவீதம் இங்குள்ள பொது மக்களின் முதலீடு. நிர்வாக போர்டில் அரசு சார்பாக மூன்று ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் இருப்பார்கள். இதையெல்லாம் மறந்துவிட்டு, பழனி பெரியசாமிக்கு, தனிப்பட்ட முறையில் எம்.ஜி.ஆர் நிலத்தை விற்று விட்டது போல இங்கே பிரசாரம் நடப்பது என்னை மிகவும் வருத்தமடையச் செய்கிறது.

''நான் ஒரு கேள்வி கேட்கிறேன். 'அயல் நாட்டு இந்தியர்கள் இங்கே வந்து முதலீடு செய்ய வேண்டும்' என்று ஓயாமல் முழங்குகிறார்கள். ஆனால், அயல்நாட்டு இந்தியர்கள் சிலர் ஒன்று சேர்ந்து, ஒரு புதுமையான திட்டத்தில் முதலீடு செய்ய முன்வரும்போது, ஒரு முதலமைச்சர் ஓ.கே. செய்வதை, அடுத்த முதலமைச்சர் ரத்து செய்கிறார். இதுதான் அயல்நாட்டு



''முன்பு தினமும் ஸ்ரீராமஜெயம் எழுதிக் கொண்டிருந்த நீங்க இப்ப எழுதுவதை ஏன் நிறுத்திட்டீங்க?''

''சின்ன வீடு செட்டப் செய்து கொண்ட பிறகு அதை எழுதுவது நியாயமாகப் படவில்லை, அதான்!''

- விசு

இந்தியர்களைத் தொழில் முதலீடு செய்ய ஊக்கமளிக்கும் விதமா? அல்லது விரட்டியடிக்கும் வழியா?

''முக்கியமான குற்றச்சாட்டுக்கு வருகிறேன்: சுற்றுப்புறச்சூழல் பாதுகாப்பு. இந்தியாவை விட, பலமடங்கு சுற்றுப் புறச் சூழல் விழிப்புணர்ச்சி கொண்ட அமெரிக்காவில் பல ஆண்டுகள் வாழ்ந்த எனக்கு அதுபற்றின உணர்வு இருக்காதா? நாங்கள் அமைக்கத் திட்டமிட்டிருப்பது மாபெரும் வளாகத்தின் மிகச் சிறுபகுதியில் ஓர் ஐந்து நட்சத்திர ஓட்டல். மற்ற பகுதி முழுக்கப் பசுமை பொங்கும் இடம். அங்கே மனைசக் கவரும் வகையில் நிலத்தை அழகுப்படுத்தி வனங்களும், பூங்காக்களும் நிறுவி, படகுச் சவாரி, நீச்சல் குளம் போன்ற பல பொழுது போக்கு அம்சங்களை அமைப்பதே எண்ணம். இந்த ''அம்யூஸ்மென்ட் பார்க்'' நம் ஊருக்கு மிகப் புதுமையான விஷயம். குடும்பத்துடன் சென்று முழுநாளையும் உல்லாசமாகக் கழிப்பதற்கு ஏற்றதோர் இடம். இது நிச்சயம் சுற்றுப்புறச் சூழலை மேம்படுத்துமே தவிர, மாசுபடுத்தாது.

''உண்மை நிலைமை இப்படி இருக்க, கன்ஸ்யூமர் ஆக்ஷன் குரூப்காரர்கள், தம்மைத் தவிர, வேறு யாருக்குமே சுற்றுப்புறச் சூழல் பாதுகாப்பில் அக்கறை இல்லை என்பது போல இத்திட்டத்துக்கு எதிர்ப்புத் தெரிவிப்பது, வியப்பளிக்கிறது.

''கடைசியாக ஒரு விஷயம். இன்னும் தமிழ்நாடு அரசு இத்திட்டத்துக்கு அனுமதி தரவில்லை. அனுமதி தரும்பட்சத்தில், இரண்டாண்டுகளுக்குள் திட்டத்தை நிறைவேற்ற முடியும் என்ற நம்பிக்கையும் எனக்கு இருக்கிறது.''

சந்திப்பு : மௌலி

---

மாதம் ஒரு நகரம்

# மத்திய சென்னைக்கு வரப்போகிறோம்!

கல்கியின் 'மாதம் ஒரு நகரம்' திட்டத்தின் கீழ், எட்டாவது நகரமாக மத்திய சென்னையைத் தேர்ந்தெடுத்திருக்கிறோம். நேரில் பார்த்துக் குறைகளையும் நிறைகளையும் அலசப் போகிறோம்.

எனவே, மத்திய சென்னைத் தொகுதியிலுள்ளவர்கள், தங்கள் பகுதியிலுள்ள குறைகளையும் நிறைகளையும்,' அரசின் செயல்பாடுகள் மற்றும் மெத்தனங்களையும் எங்களுக்குச் சுருக்கமாக எழுதியனுப்ப வேண்டுகிறோம். தவிர, தனி மனிதச் சாதனைகளோடு இளைஞர் - சமூக அமைப்புகளின் செயல்பாடுகளையும் சுருக்கமாக எழுதியனுப்பலாம்.



மத்திய சென்னைவாசிகளான உங்கள் கடிதங்கள் கல்கி அலுவலகத்துக்கு வந்து சேர வேண்டிய கடைசித் தேதி : 4.6.92.

உடனடியாக எழுதியனுப்புங்கள். உறையின் மேல் தவறாமல் 'மாதம் ஒரு நகரம்- மத்திய சென்னை' என்று குறிப்பிட்டு அனுப்புங்கள்.

- ஆசிரியர்

# கடலூர்: தீராத பிரச்னைகளில்

●● தமிழ்நாட்டிலேயே மிகவும் நெரிசலான ஒரு பஸ் ஸ்டாண்டைத் தேர்ந்தெடுத்துப் பரிசு தர வேண்டுமானால், அதைக் கடலூர் பஸ் நிலையத்துக்கே தரலாம். அத்தனை நெரிசல். சரி, பஸ் நிலையத்தை விரிவுபடுத்தா விட்டால் போகிறது; இருப்பதையாவது சுத்தமாய் வைத்துக் கொண்டால் என்ன? ஒரு மூலையில் கட்டணக் கழிப்பிடம் அமைந்திருந்தாலும், பலரும் பஸ் ஸ்டாண்டின் ஒரு மூலையையே கழிப்பிடமாக்கிக் கொள்கிறார்கள். இதைப் பார்த்த கட்டணக் கழிப்பிட காண்டிராக்டர் என்ன செய்திருக்கிறார் தெரியுமா? கட்டணக் கழிப்பிடத்துக்கு வெளியே, கழிப்பிடமாய்ப் பயன்படுத்தப்படும் பஸ் நிலையப் பகுதியிலேயே டோக்கன் புக் சகிதம் நின்று கொண்டு, கட்டணம் வசூலிக்கிறார். இதனால் அவ்வப்போது பயணிகளுக்கும், காண்டிராக்டருக்கும் அனல் பறக்கும் வாக்குவாதம்!

இவையெல்லாம் போதாதென்று கூடை வியாபாரிகளின் ராஜ்ஜியமாகவும் விளங்குகிறது பஸ் ஸ்டாண்டு. சமீபத்தில் கலெக்டரும், எஸ். பி.யும் எடுத்த நடவடிக்கைகளின் பேரில் கூடை வியாபாரிகள் அப்புறப்படுத்தப்பட்டு, பஸ் நிலையம் கொஞ்சம் சீரானது. ஆனால், லோக்கல் அரசியல்வாதிகள் சும்மா இருப்பார்களா? கலெக்டரிடம், பாதிக்கப்பட்டவர்கள் சார்பாய்ப் பேசி, ''பிரஷர்'' கொடுக்க, கலெக்டரும், பஸ் நிலையத்தில் ஒரு குறிப்பிட்ட பகுதியைக் கூடை வியாபாரிகளுக்கென்று ஒதுக்கியுள்ளார். அன்று லக்ஷ்மணன் போட்ட கோட்டையே சீதை தாண்டி விட்ட பின், நம் கூடை வியாபாரிகளுக்கு கலெக்டர் போட்ட கோடு எம்மாத்திரம்? பழைய படி கூடைகள் ராஜ்ஜியம் கொடிகட்டிப் பறக்கிறது!

●● தொடர்ந்து 508 மணி நேரம் பேசிக் கின்னஸில் இடம்பெற்றவர் கடலூரிலுள்ள ஜெயராமன். அவர் மனைவி அஞ்சலையோ தொடர்ந்து இரண்டு வரிகள் பேசவே கூச்சப்படுகிறார். கணவருக்குப் பரிசாகக் கிடைத்த கலர் டீவியைத் தமது வீட்டில் வைத்துச் சினிமா பார்க்க முடியவில்லையே என்பதில் அஞ்சலைக்கு ஏகக் குறை. காரணம், கரண்ட் வசதியுள்ள வீட்டுக்குக் குடிபோகும் அளவுக்கு வருமானம் இல்லை என்பதுதான்.

●● ஆபரேஷனுக்குப் பயன்படாத ஆபரேஷன் தியேட்டர் எங்கே இருக்கிறது

☛ பஸ் நிலையம்





☛ கின்னஸ் ஜெயராமன்

# ஒரு கின்னஸ் சாதனை!

என்ற கேள்வி எந்த விநாடி வினா நிகழ்ச்சியிலாவது கேட்கப்பட்டால், 'கடலூர் அரசு மருத்துவமனையில்' என்று பதில் சொல்பவருக்கு முழு மதிப்பெண் தரலாம். ஆம்! ஏ.சி. வேலை செய்யாததால், தியேட்டருக்கு வெளியேதான் மைனர் ஆபரேஷன்கள் நடக்கின்றன. விசாரித்ததில், இரண்டு ஏ.சி. யூனிட்டுகளும், சரிசெய்யப்பட்டு விட்ட நிலையில், இன்னும் ஒரு மாதத்துக்குள் ஆ. தியேட்டர்கள் ரெடியாகி விடும் என்று சொன்னார்கள்.



அப்பர் பிறந்த குளம்...

ஆஸ்பத்திரியில், ஜாதி அடிப்படையிலான 'குரூப்பிஸம்' வேறு! யார் மேலாவது ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்பட்டால், அவர், மேலே சென்று, கவனிக்க வேண்டியவர்களைக் கவனித்து, ஒழுங்கு நடவடிக்கையை ரத்து செய்து விட்டு நடவடிக்கை எடுத்தவர் முன்வந்து பவ்யமாய் சல்யூட் அடித்தபடி நின்று வெறுப்பேற்றுவாராம். இத்தகைய கொடுமைகளைச் சகித்துக் கொள்ள முடியாமல், ஒரு தடவை மானஸ்தரான ஓர் அதிகாரி பதவி உயர்வே வேண்டாம் என்று சொல்லி, வேறு ஊருக்கு மாற்றல் வாங்கிக் கொண்டு போய் விட்டாராம்.



அஞ்சலை

●● சாதாரணமாய் ரோடு என்றால் இருபுறமும் பிளாட்பாரம் இருக்கும். ஆனால் கடலூரில் சாக்கடைகள்தான் இருக்கும். அது மட்டுமில்லை; சாக்கடைத் தண்ணீர் தேங்கி, கொசு உற்பத்தி ஸ்தலமாகவும் விளங்கும். பாதசாரிகளையே கொசுக்கள் கடிக்கும்!

●● கடலூரில் போக்குவரத்து நெரிசலைத் தீர்ப்பது என்பது பிரம்மப் பிரயத்தனம்தான். சுகட்டுமேனிக்கு ஹாரனை அடித்துக் கொண்டு அதிவேகமாகச் செல்லும் பஸ்கள்; கட்டுப்பாடு ஏதுமில்லாத ஆட்டோக்கள்; கண்ட இடங்களில் ரோட்டைக் கடக்கும் பாதசாரிகள் தவிர, குதிரை வண்டிகள் என்று போக்குவரத்துப் பிரச்னைக்குரிய காரணங்களைப் பெரிய பட்டியலே போடலாம்.

அண்ணா மேம்பாலம் அருகில் உள்ள போக்குவரத்து சிக்னல்தான் கடலூரின் ஒரே சிக்னல். ஆனால் அதை யாரும் மதித்து நடப்பது கிடையாது. ''பார்த்தீங்களா! போலீஸ்காரர் ஒண்ணும் கண்டுக்க மாட்டார்'' என்று கூறியபடி, சிக்னலை மதிக்காமல் போனார் நாம் சென்ற ஆட்டோ டிரைவர்!

●● கடலூரில் உள்ள தியேட்டர்களின் சிறப்பு அம்சமே 'எக்ஸ்டிரா சேர்' தான். பல தியேட்டர்களில், காசை வாங்கிக் கொண்டு, மக்களை உள்ளே அனுப்பி விடுவார்கள். உள்ளே, அவர்களுக்கென்று ஸ்பெஷலாய் 'எக்ஸ்டிரா சேர்' போடுவார்கள். நாற்காலி மட்டுமல்ல; ''கை'' ஓங்கியுள்ள ஒருவரின் தியேட்டரில் நீலப் படங்களும் போடுவார்களாம்!

●● கடலூரில், ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்துக்கு போனில் பேச வேண்டுமானால், உங்களுக்குக் குறைந்த பட்சம் அதிர்ஷ்டம் இருக்க வேண்டும். டெலிபோன் எக்ஸ்சேஞ்சைக் கூப்பிட்டு, உங்களுக்குத் தேவையான எண்ணைச் சொல்லி, அது கிடைத்தும் விட்டால், பத்மஸ்ரீயே கிடைத்த மாதிரி பெருமைப் பட்டுக் கொள்ளலாம். என்ன செய்வது? பழைய காலத்து எக்ஸ்சேஞ். இதோ மாற்றுகிறோம்; இதோ புதிய யந்திரம் வரு கிறது, வந்து கொண்டேயிருக்கிறது என்று சொல்லி வந்ததைக் கேட்டு மக்கள் சலிப் படைந்து இருக்கிறார்கள்.

●● டெலிபோன் கனெக்ஷன் கிடக் கட்டும். தண்ணீர்க் குழாய் கனெக்ஷன்? ''முனிசிபாலிடியில் பணம் இல்லை என் கிறார்கள். போர்வெல் போட்டுக் கொண் டிருக்கிறோம் நாங்கள்!'' என்கின்றனர் ரவீந்திரன் தம்பதி. ''இந்த வட்டாரத்தில் அறுபது வீடுகளைச் சுற்றிலும் குப்பை அகற்றிச் சுத்தமாக வைத்துக் கொள்ள, ஆளுக்கு (அதாவது வீட்டுக்கு)ப் பத்து ரூபாய் வீதம் சேகரித்து, ஓர் ஆளைப் போட் டிருக்கிறோம்!'' என்கிறார்கள்.

●● அப்பர் பெருமானைக் கல்லில் கட்டித் தண்ணீரில் தள்ளிய போது, ''நற் றுணையாவது நமசிவாயவே'' என்று மேலே எழுந்து வந்த, புராணப் புகழ்பெற்ற தெப்பக்குளத்தில், இன்று எருமைகள்தான் ஹாய்யாக முங்கித் திளைத்துக் கொண் டிருக்கின்றன. சுற்றுலா வளர்ச்சித் திட்டத் தில் இந்தக் குளத்தையும் சேர்த்துக்



☛ ரவீந்திரன் தம்பதி

கொண்டு, சீராக்கப் பணம் ஒதுக்கியிருந்த தாம் தி.மு.க. ஆட்சி. இனிமேல், புரட்சித் தலைவியின் புனிதப் பார்வை இங்கே வீசி னால்தான் உண்டு.

●● திருப்பாதிரிப்புலியூர் போஸ்ட் ஆபீசில் எப்போதும் இருள்தான் என்று கடலூர்வாசி ஒருவர் எழுதியிருந்த கடிதத் தைப் படித்த போது நம்புவதற்குக் கஷ்ட மாகத்தான் இருந்தது. 'லோ வோல்டேஜ் காரணமாக டியூப் லைட்டுகள் எரிவ தில்லை. அதனால் ஒவ்வோர் ஊழியர் தலைக்கு மேலேயும் ஒரு பல்பு எரிகிற மாதிரி ஏற்பாடு செய்திருக்கிறோம்'' என்றார் தபால் துறைக் கண்காணிப்பாளர் பார்த்த சாரதி. இந்தப் பின்னணியில், வீட்டுச் சொந்தக்காரர் கோர்ட்டுக்குப் போய் அதிக வாடகை தரக் கேட்டிருக்கிறா ராம்!

●● மாவட்ட மத்திய நூலகக் கட்டடம் விரிசலடைந்து விட்டதால், அது, நெருக்கடியான குழந்தைகள் நூலகத்திற்கு மாற்றப்பட்டு விட்டது. புதிய கட்டடம் கட்டுவதற்கு அரசின் விஞ்ஞானத் துறை யினர் வந்து ஒன்பதரை லட்சத்திற்குப் பிளான் போட்டுக் கொடுத்து விட்டுச் செல்ல, நூலக ஆணைக் குழுவோ எட்டு லட்சம்தான் அனுமதித்துள் ளது. எனவே, இப்போது பிளா னைச் சுருக்குவதா, தொகை யை அதிகரிப்பதா என்பது பெரிய பிரச்னையாக இருக் கிறது. இதற்கிடையில்,



☛ அரசு மருத்துவமனை




☛ நூலகம்

பழைய இடத்தின் ஒரு பகுதியை அரசியல் கட்சிக்காரர்கள் ஆக்கிரமித்துக் கொண்டு, நீதிமன்ற உத்தரவுக்கே நகர மாட்டேன் என்கிறார்கள்.



☛ வேலுச்சாமிச் செட்டியார்

●● சாதாரணமாக முச்சந்தியாகத் தெருக்கள் சேரும் இடத்தில் உள்ள வீடுகளின் காம்பவுண்டு சுவரில், சிறிதாகப் பிள்ளையார் சிலை வைப்பது வழக்கம். இந்த சென்டிமெண்ட், போலீஸ் ஸ்டேஷனைக் கூட விட்டு வைக்கவில்லை. படத்தில் இருப்பது கடலூர் திருப்பாதிரிப் புலியூர் காவல் நிலையத்தின் நுழைவுப் பகுதியில் காணப்படும் பிள்ளையார்.

ஆமாம், போலீஸ்காரர்கள் பிள்ளையாரிடம் என்ன வேண்டிக் கொள்வார்கள்? கேஸ் ஏராளமாகக் கிடைக்க வேண்டுமென்றா அல்லது கேஸே இல்லாமல் மக்களிடம் அமைதி நிலவ வேண்டுமென்றா?

☛ போலீஸ் பிள்ளையார்



●● கடலூர் அருங்காட்சியகம் வித்தியாசமானது. காட்சிச் சாலையாக மட்டும் இருந்துவிடாமல் கோயில்கள், கட்டடக் கலை, தமிழ்க் கல்வெட்டு எழுத்துக்கள் என்று பல விஷயங்களைப் பற்றி மாதா மாதம் சொற்பொழிவு நடத்துகிறார்கள். இந்த வருடம் நடத்தப்பட்ட கோடை விடுமுறைப் பயிற்சி முகாமில் சுமார் அறுபது மாணவ - மாணவியர் சித்திரம் வரையும் பயிற்சியும் பெற்றார்கள்.

☛ மணிக்கண்ணன்



●● ''கடலூரில் உள்ள பார்வை இழந்தோர் பள்ளி மாணவர்களைக் கண் மருத்துவ முகாம் ஒன்று நடத்திப் பரிசோதனை செய்தோம். அப்போது ஐந்து மாணவர்கள் பிறவியிலேயே காடராக்ட் நோயால் பார்வை இழந்தவர்கள் என்று கண்டுபிடித்தோம். அறுவைச் சிகிச்சை செய்த பிறகு ஐந்து பேருக்குமே பார்வை கிடைத்தது!'' என்கிறார் மணிக்கண்ணன். இவர் தொலைபேசி நிலைய ஊழியர் என்பதைவிட, ரத்த தானம், கண்தானம், கண்ணாடி தானம் என்று தொண்டாற்றும் பொதுநல ஊழியர் என்பதில்தான் அதிக மனநிறைவு பெறுகிறார். தமது அலுவலகத் தொழிற்சங்கத் தலைவர் சொரூபன்தான் இதற்குத் தூண்டுகோல் என்கிறார். 'குருஜி சமூக சேவை மையம்' என்ற இவரது அமைப்பில், சொந்தமாகத் தொழில் தொடங்க உதவி செய்தல் என்ற புதிய ஏற்பாட்டின்படி ஒருவருக்கு டைப்ரைட்டர் கிடைத்திருக்கிறது.

●● 'சிறு வியாபாரிகள் வருஷத்துக்கு ரூ 1400 செலுத்த வேண்டும்' என்று மன்மோகன் சிங் பட்ஜெட்டில் கொண்டு வந்த வரிவிதிப்பு, ரொம்பத்தான் சலசலப்பை ஏற்படுத்தியது. ஆனால் கடலூரில்... மூச்! காரணம், கடலூரிலுள்ள வர்த்தகர் சங்க கௌரவத் தலைவர் வேலுச்சாமி செட்டியார், 2000 சிறிய, பெரிய வர்த்தகர்களுக்கு வழிகாட்டி மாதிரி, மூத்தவராக இருப்பதால், நல்லதை இவர் எடுத்துச் சொல்லும் போது உறுப்பினர்கள் கேட்டுக் கொள்ளுகிறார்கள்.

– நமது நிருபர்கள்

# "சட்டம் ஒழுங்கைவிட மனிதாபிமானமே முக்கியம்!"



☛ போலீஸ்காரருக்குச் சிலை...



☛ ஜங்கிட்

**தென்னாற்காடு மாவட்ட காவல்துறைக் கண்காணிப்பாளர் எஸ். ஆர். ஜங்கிட் ஐ. பி. எஸ்ஸுடன் ஒரு பேட்டி...**

"தென்னாற்காடு மாவட்டத்தின் சட்டம் - ஒழுங்கு எப்படி இருக்கிறது?"

"திருப்திகரமாகவே இருக்கிறது. குற்றவாளிகளைப் பிடிப்பதில் மட்டுமல்லாமல் குற்றங்கள் நடப்பதைத் தடுப்பதிலும் அக்கறை காட்டுகிறோம். இவ்வகையில் கடந்த ஓராண்டில், வன்னியர்கள்- அரிஜனங்கள் ஆகியோருக்கிடையிலான மோதல்கள் ஏதும் இல்லாமல், இருதரப்பினரும் அமைதியாய் வாழ்வதே குறிப்பிடத்தக்க ஒரு விஷயம். சாதாரண காவலர்கள் முதல், மாவட்ட அளவிலான அதிகாரிகள் வரை அனைவரும் முழு ஒத்துழைப்புத் தருவதால்தான் இது சாத்தியமாகிறது."

"கள்ளச் சாராயம் முற்றிலுமாய் இங்கே ஒழிக்கப்பட்டு விட்டதா?"

"பெரிய அளவில் நடந்து கொண்டிருந்த கள்ளச் சாராய வியாபாரம் அடியோடு ஒழிக்கப்பட்டு விட்டது. பாண்டிச்சேரியை ஒட்டி அமைந்துள்ள தென்னாற்காடு மாவட்டத்தின் சில கிராமங்களில் இன்னும் சிறு அளவில் கள்ளச் சாராய வியாபாரம் நடந்து கொண்டுதான் இருக்கிறது. அவ்வப்போது ரெய்டுகள் நடத்தி, நாங்களும் சம்பந்தப்பட்டவர்களைக் கைது செய்து கொண்டுதான் இருக்கிறோம்."

"போக்குவரத்தைப் பொறுத்தவரை, நிலைமை மிக மோசமாக உள்ளது. குறுகலான சாலைகளிலும் மிக வேகமாய்ச் செல்லும் வாகனங்கள்; கண்ட இடத்தில் சாலையைக் கடக்கும் பாதசாரிகள் என்று பல. இவற்றைக் கட்டுப்படுத்த முடியாதா?"

"மக்களுக்குச் சாலைப் போக்குவரத்து பற்றின அறிவு அதிகமில்லை. மக்களிடையே இது பற்றிய உணர்வினை ஏற்படுத்த அவ்வப்போது துண்டுப் பிரசுரங்கள் விநியோகிக்கிறோம். சாலை விதிகளைக் கடுமையாகச் செயல்படுத்தி, மீறுகிறவர்களைத் தண்டிக்கலாம். ஆனால் அது மக்களுக்கு அசௌகரியங்களைத்தான் அதிகப்படுத்தும். காரணம், இங்கே வருபவர்களில் பலர் சுற்றுப்புற கிராமத்து மக்கள்தான். மனிதாபிமான நோக்கில், இப்படிச் செய்வது சரி என்று எனக்குப் படவில்லை. ஆனாலும், சட்டபூர்வமில்லாத ஆக்ரமிப்புகளை அகற்றுவதில் கலெக்டரோ, நானோ தாட்சண்யம் காட்டுவது இல்லை."

ராஜேந்திரன் என்ற போலீஸ் கான்ஸ்டபிள், சென்ற ஆண்டு காட்டு மன்னார்கோவில் பகுதியில் போலீஸாருக்கும், நக்ஸலைட்டுகளுக்கும் இடையில் நடந்த மோதலில் மரணமடைந்தார். போலீஸாரிடமிருந்து நிதி திரட்டி, அவருடைய குடும்பத்துக்கு உதவி செய்ததோடு நில்லாமல், ராஜஸ்தான் மாநிலத்தில் பிரத்தியேகமாய் ஆர்டர் செய்து, சலவைக் கல்லில் செய்யப்பட்ட ராஜேந்திரனின் சிலையைக் கடலூர் காவல் துறைத் தலைமையகத்தில் நிறுவியிருக்கிறார் எஸ். பி. ஜங்கிட். சமீபத்தில் சாராய வேட்டையின் போது, சமூக விரோதிகள் சிலருடைய தாக்குதலுக்கு ஆளானதால் மரணமடைந்த இன்னொரு காவலரின் குடும்பத்துக்கும், நிதி திரட்டி அதைக் கொண்டு ஒரு வீடு வாங்கித் தந்திருக்கிறார். "இதுபோன்ற காரியங்கள், மற்ற போலீஸ்காரர்கள் மத்தியில் மனஉறுதியையும், தியாக மனப்பான்மையையும் அதிகரிக்கச் செய்யும்" என்கிறார் எஸ். பி. ஜங்கிட்.

– மௌலி

# ஸ்ரீ யோகாம்பிகை அதிஷ்டானம்
## ஸ்ரீ யோக கருமாரி அம்மன் அதிஷ்டானம்,
## திருவேற்காடு, சென்னை - 600 077.



உலக க்ஷேமத்திற்கு 20 ஆம் ஆண்டு *"ஸ்ரீ சத சண்டி மஹா யாகம்"* ஆரம்பம் 12.6.92, 14.6.92 விசாக பௌர்ணமி மாலை மஹா பூர்ணாஹுதி அநுசமயம் கலைமாமணி Bombay Sisters ஸ்ரீமதி C. சரோஜா, ஸ்ரீமதி C. லலிதா பாடியுள்ள *"ஸ்ரீ யோகாம்பிகை சுப்ரபாதம் ஸ்ரீ யோகாம்பிகை மானசபூஜா"* அரங்கேற்றம் நடைபெறும். தலைமை தாங்குபவர் கலை மாமணி சிதம்பரம் Dr. V.V. ஸ்வர்ண வெங்கடேச தீக்ஷிதர் D. Litt. விழா துவக்குபவர் ப்ரும்மஸ்ரீ V. நீலகண்ட ஐயப்பன். வெளியிடுபவர், ஸங்கீத கலாநிதி செம்மங்குடி Dr. R. ஸ்ரீநிவாச ஐயர் அவர்கள்.

கேஸட் பெறுபவர். கலை மாமணிகள் சிக்கல் சகோதரிகள் ஸ்ரீமதி நீலா, ஸ்ரீமதி குஞ்சுமணி, Mandolin ஸ்ரீ U. ஸ்ரீநிவாஸ்.

அதிஷ்டான விருது பெறுபவர்கள் : கலைமாமணி Bombay Sisters, இசை அமைத்தவர் ஸ்ரீ L. கிருஷ்ணன். ஆசிரியர்: லாக்தஸ்ரீ Dr. K. வைத்யநாத சாஸ்திரி, புதுக்கோட்டை. வித்வத் உரை வழங்குபவர் வித்யா வாலஸ் பதி ஸ்ரீ P. ராமதாஸ் ஐயர் ஆனந்த தாண்டவபுரம். ஸ்ரீ காஞ்சி பரமாச்சார்யாள் ஜெயந்தி, ஸங்கீதாலயாவின் கச்சேரி நடைபெறும்.




ஒரு சங்கல்ப ஹோமத்திற்கு ரூ. 150/- அனுப்புகின்றவர்களுக்கு யாகசாலை பிரஸாதத்துடன் ஸ்ரீ வித்யா பூஜாக்ரமம் மலர், மேற்படி கேசட்டும் தனித் தபாலில் அனுப்பப்படும்.

நன்கொடை மற்றும் சங்கல்பத்திற்கு ஹோம கமிட்டி ஸ்ரீ யோகாம்பிகை அதிஷ்டானம் திருவேற்காடு, சென்னை - 600 077 என்ற முகவரிக்கு அனுப்பவும்.

குழுதலைவர் : தவத்திரு அருள்மொழி அரசு திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள், உபதலைவர் அம்பிகை அடிமை ஸ்ரீ N. சங்கரன், ஸ்தாபகர், அதிஷ்டானம் திருவேற்காடு, காரியதரிசி : ஸ்ரீ M.V. ஸ்வாமிநாதன் B.Com.



# கல்கி



1992
மே 31
மலர் : 50
இதழ் : 44
ஆங்கீரச
வைகாசி 18

## புலிகளுக்குத் தடை

அப்பாடா! ஒருவழியாக மத்திய உள்துறை அமைச்சர் விடுதலைப் புலிகளுக்கு இந்தியாவில் தடை விதித்து விட்டார். "இன்னும் சாட்சியம் வேண்டு'!" என்று சொல்லிக் கொண்டிருந்தவருக்குப் பத்து நாட்களுக்குள் "திடும் என்று" என்ன புதிய சாட்சியங்கள் கிடைத்தனவோ. துணிவு பெற்று உத்தரவு போட்டுவிட்டார். 'ஜெ'யும் நன்றி கூறி உள்துறை அமைச்சரைப் பாராட்டிவிட்டார். நாமும் பாராட்டத்தான் செய்கிறோம். ஆனால் தடை விதித்ததுடன் கதை முடிந்து விடவில்லை என்று கூறி எச்சரிக்கவும் விரும்புகிறோம்.

விடுதலைப்புலிகளை 'ஜெ' அடக்கிவிட்டதாக அவரும் அவரது கட்சிக்காரர்களும் எண்ணினால் அது மாயையே. அடக்கப்பட்டார்கள் என்பதை விட அடங்கியிருக்கிறார்கள் என்பதே சரியான கணிப்பாக இருக்கும். இந்தக் கணிப்பில் தவறில்லை என்பதையும் சற்று யோசித்தால் பகுத்தறிவு நமக்கு உணர்த்தும். புலிகள் தமிழீழத்துக்காகப் போராடுவது எனில் தமிழ் நாட்டில் காலூன்றிக் கொள்ளாமல் முடியாது. எனவேதான் இங்குள்ள பலருக்கும் ஆசை காட்டி "தமிழீழத்தை உள்ளடக்கிய சுதந்திரத் தமிழகம்" பற்றியும் பேசப்படுகிறது. புலிகளுக்குப் பெட்ரோல், டீசல் சப்ளை செய்தே இங்கு லட்சாதிபதியானவர்கள் பலர். ஆயுத சப்ளையும் இதர யுத்த தளவாடங்களும் தமிழகக் கடற்கரையோரமாகத்தான் புலிகளைச் சென்று அடைய வேண்டும். இதிலெல்லாம் பணம் பேசும் என்பது தவிர, அவர்கள் ரகசியமாக ஊட்டி வளர்க்கும் லட்சிய வெறியும் இங்கே பலருக்குப் போதையூட்டும்.

இவர்களையெல்லாம் அதிகார பலத்தால் அடக்க முற்பட்டால் என்ன ஆகும்? ஓரளவு வெளிப்படையாக நடக்கும் காரியங்கள், முற்றிலும் மறைமுகமாக நடக்கும். இவர்கள் under ground க்குப் போய் விட்டால், பிறகு கண்டுபிடிப்பதும் போராடுவதும் முன்னிலும் கடினமாகும். வடக்கேயும் மேற்கேயும் உள்ள நமது நாட்டின் விரோதிகள் கண் மறைவில் இவர்களைத் தூண்டி விடுவார்கள்; உதவவும் செய்வார்கள். சுருக்கமாகவும் தெளிவாகவும் கூறுவதெனில் தமிழகம் ஒரு காஷ்மீராகவோ அல்லது பஞ்சாபாகவோ மாறவும் வாய்ப்புண்டு. மாவீரர்களைக் கொண்ட நமது ராணுவம் எதிரிகளை நேருக்கு நேர் சந்தித்தால் நிச்சயம் வெற்றி பெறும். ஆனால் ஒளிந்திருந்து தாக்குவோரை, தாக்கிவிட்டு ஓடுவோரை, அப்பாவி மக்களை மிரட்டிப் பணம் பறிப்போரை, ஒரு பாவமும் அறியாதவர்களைக் கொலை புரியும் கோழைகளை எப்படிச் சமாளிப்பது?

விடுதலைப் புலிகளுக்குத் தடை விதித்துச் சட்டம் இயற்றினால் மட்டும் போதாது! அவர்களுக்கு உதவிபுரிவோர், அவர்கள் சார்பில் பேசுவோர் "தேசத் துரோகிகள்" என்பதாக அறிவிக்கும் சட்டமும் வர வேண்டியிருக்கும். அப்படி வரும்போது தமிழகத்தின் அமைதி மேலும் கெடும்.

இப்போது நமது நிலைமையைப் பார்த்து, இலங்கை அரசு அதிகாரிகளும் அரசியல்வாதிகளும் ரகசியமாகச் சிரித்துக் கொண்டிருக்கிறார்கள். முன்பு விடுதலைப் புலிகளுக்குப் பயிற்சி தந்து, பணம் தந்து ஊக்குவித்தவர்கள் இன்று அதே விடுதலைப்புலிகளுக்குத் தடைவிதிக்க வேண்டிய அளவுக்குத் தலைவலியை அனுபவித்துக் கொண்டிருப்பது கண்டு எள்ளுகிறார்கள்.

தலைவலி, திருகுவலியாக மாறாது இருக்க வேண்டுமானால் தடை விதித்ததோடு நில்லாமல் பிரச்னைக்கு அரசியல் தீர்வு காணவும் மத்திய அரசு முயற்சியை மேற்கொள்ள வேண்டும். வெற்றி தோல்வியே காண முடியாமல் இழுத்துப் பறித்துக் கொண்டு போகும் யுத்தத்தை நிறுத்திச் சமாதான உடன்படிக்கைக்கு வருமாறு புலிகளையும் இலங்கை அரசையும் வற்புறுத்த வேண்டும். 'பிரபாகரனைக் கூண்டில் ஏற்ற வேண்டியதிருக்கப் புலிகளுடன் பேச்சு வார்த்தைக்கு உதவுவதா?' என்று எதிர்க்கட்சியினர் உடனே மத்திய அரசை மக்கள் மதிப்பில் விழ்த்தப் பார்ப்பார்கள். எனவே இந்த விஷயத்தில் எதிர்க் கட்சிகளையும் சாமர்த்தியமாக மத்திய அரசு அணைத்துச் செல்ல வேண்டும்.

வீரம் தேவைதான்; ஆனால் கூடவே யாதார்த்த நோக்குடனும் தீர்க்க தரிசனத்துடனும் விவேகமும் செயல்பட்டால் தான் நாட்டுக்கு நல்லது.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.



# “என்னால் முடிந்ததைச் செய்கிறேன்!”

இரண்டு முறை பார்லிமெண்ட் உறுப்பினராக இருந்து, சென்ற வருடச் சட்டசபைத் தேர்தலில் இ. காங்கிரஸ் சார்பில் கடலூர்த் தொகுதியில் போட்டியிட்டு வென்றவர் வேங்கடேசன். அவரிடம் கடலூர்ப் பிரச்னைகள் சிலவற்றை எழுப்பினோம் :

## மேம்பாலம் :

இருபது வருடங்களுக்கு மேலாக இருந்து வரும் பிரச்னை இது. 84-ல் பாராளுமன்ற உறுப்பினராகச் சென்ற போது, என்னுடைய கன்னிச் சொற்பொழிவிலேயே இதைத்தான் நான் முக்கிய தேவை என்று குறிப் பிட்டேன். அதன் பிறகுதான் தேசிய நெடுஞ் சாலை அல்லது ரெயில்வே பராமரிப்புத் திட்டத்தில் சேர்க்கப்பட்டது. கோப்பும் உரு வாக்கப்பட்டது. இப்போது இருக்கிற இடத் திலேயே போடலாமா, அல்லது சூரப்ப நாயக்கன்சாவடி அருகில் போடலாமா என்பது பற்றியெல்லாம் விவாதிக்கப்பட்டது. பழைய குட்ஸ் ஷெட் வரை ரெயில்வே நிலமாகக் கொடுக்க வேண்டும்... இதற்கெல்லாம் இன்னும் மூன்று, நான்கு ஆண்டுகள் ஆகலாம்.

## துறைமுகம் மேம்பாடு :

ஓல்ட் டவுன் எனப்படும் ஓ.டி.யின் முன்னேற்றமே துறைமுகத்தின் அபிவிருத்தியில்தான் இருக்கிறது. ராஜீவ் வந்திருந்த போது துறைமுக மேம்பாட்டுக்கு உறுதி அளித்தார். ஆராய ஒரு குழுவைக் கூட அனுப்பி வைத்தார். மாநில அரசும் ஒரு திட்ட தயாரித்திருக்கிறது.

## தொழில்துறை வளர்ச்சி :

நாலைந்து வருடங்களுக்கு முன்னால் உருவான ‘சிப்காட்’ தொழிற்பேட்டைக்குப் பிறகு, வேறு முக்கியமான தொழிற் பேட்டை எதுவும் வரவில்லைதான். ஸ்பிக், ஜே. கே. டயர்ஸ் இரண்டும் இங்கே தொழிற்சாலை அமைக்கப் போவதாகச் சொல்லியிருக்கிறார்கள். ஆனால் இவை ரசாயனத் தொழிற்சாலைகளாயிருப்பதால், சுற்றுச் சூழல் பாதிப்பு ஏற்பட வாய்ப்பு உண்டு என்பதையும் மறந்து விடக் கூடாது.

## அரசு மருத்துவமனை அவலம் :

ஆபரேஷன் தியேட்டரில் ஏ. ஸி. இயங்கவில்லை. அதனால் வெராந்தாவில் அறுவைச் சிகிச்சை நடப்பதாக நீங்கள் குறிப்பிடுவது உண்மைதான். மருத்துவமனையில் சேவை ஒழுங்காக இல்லை என்பது பலரும் என்னிடம் தெரிவித்தது தான். அங்கே குரூப்பிஸம் களையப்பட்டு, ஊழியர்களும் பொறுப்போடு நடந்து கொண்டால் போதும், பிரச்னைகளே இருக்காது. மருத்துவமனையில் தண்ணீர்த் தட்டுப்பாட்டை நீக்க டாங்குகளில் நீர் வழங்குகிற ஏற்பாடு செய்யப்படுகிறது.

## பாதாளச் சாக்கடை :

மாநில அரசின் அனுமதிக்காகக் காத்திருக்கிறது இந்தத் திட்டம். ஒவ்வொரு பகுதியாக வேலை முடிப்பது என்று வைத்துக் கொண்டால் கூட, ஒவ்வொரு பகுதிக்கும் மூன்றரைக் கோடி ரூபாய் அளவில் செலவு ஆகும் என்று தெரிகிறது. நிதி இல்லை என்பதால் உலக வங்கி அல்லது எல்.ஐ.சி. கடன் கிடைத்தால்தான் திட்டம் நிறைவேறத் தொடங்கும்.

மேற்படி தகவல்கள் தவிர, கடற்கரை மேம்பாட்டுத் திட்டத்தை மகாவீர் சேட், லயன் சுந்தரம் போன்ற உறுப்பினர்கள் கொண்ட குழுவில் விவாதிப்பதாகவும் திருப்பாதிரிப்புலியூர் - ஓ. டி. பகுதிகளில் தண்ணீர்த் தட்டுப்பாடு களைய முனைவதாகவும் தெரு விளக்குகள் ஒழுங்காக எரிய முயற்சிகள் எடுத்து வருவதாகவும் கூறினார் வேங்கடேசன்.

பேட்டி : எஸ். வி. என்





## ஸ்ரீமத் ஸத்குரு ஸதாசிவ ப்ரும்மேந்திர ஸரஸ்வத்யவதூத ஸ்வாமிகள் அதிஷ்டானம் - புதுக்கோட்டை.

## புதுக்கோட்டை அதிஷ்டானம் ஸ்ரீமாதா புவனேஸ்வரி ஸந்நிதி மஹாகும்பாபிஷேகம்

ஆங்கிரஸ, வைகாசி 22 (4.6.92)

வியாழன்

### ஸ்ரீ மஹா ஸுதர்சன மந்த்ர ஸஹித மண்டல சண்டீ ஹோமம்

ஸ்ரீ மாதா புவனேஸ்வரி மஹா கும்பாபிஷேகத்தையடுத்து 5.6.92 முதல் 22.7.92 முடிய ஒரு மண்டலம் (48 நாட்கள்) புதுக்கோட்டை அதிஷ்டானத்தில் ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் ஆக்ஞைப்படி தினசரி ஸ்ரீ ஸுதர்ஸன மஹாமந்த்ர ஸஹித ஸ்ரீ சண்டீ மண்டல மஹாயக்ஞம் நடைபெறும்.

"வைஷ்ணவி விஷ்ணு ரூபிணி எனப் போற்றப்படும் ஸ்ரீசண்டியின் திருவருளால் உலகில் வளம் செழிக்கவும் பரஸ்பரம் த்வேஷம் நீங்கி ஒற்றுமை நிலவி மக்கள் பல்வேறு செல்வங்களையும் பெற்று ஆரோக்கியமாகவும், மன மகிழ்ச்சியுடன் வாழவும், கொடிய பூதபிரேத பிசாச துர்தேவதைகளின் கொடுமையிலிருந்து நீங்கவும் மஹா சக்திவாய்ந்த ஸ்ரீ ஸுதர்ஸன மஹாமந்த்ரத்துடன் சப்தசதீ எனப்படும் 700 வரங்களான மஹாமந்திரங்களையும் இணைத்து மஹா சண்டீ ஹோமம் நடைபெறவுள்ளது.

இவ்வரிய ஸ்ரீஸுதர்ஸன மஹாமந்த்ர ஸஹித சண்டீ மஹாயக்ஞத்தில் ஒரு மண்டலம் (48 நாட்கள்) பூஜாஹோமங்களில் வைக்கப்பெற்ற வெள்ளி டாலர் (ஒரு பக்கம் ஸ்ரீ மாதா புவனேஸ்வரி உருவம் மறுபுறம் ஸ்ரீ ஸுதர்ஸன மஹாவிஷ்ணு உருவம்) மண்டல ஹோமம் முடிந்த ஒரு வாரத்தில் அனுப்பி வைக்கப்படும். அவ்வெள்ளி டாலருக்கான நன்கொடை ரூ. 101/- (ரூபாய் நூற்று ஒன்று மட்டும்). ஒரு நாள் மண்டகப்படிக்கான செலவு ரூ. 3000/- (ரூபாய் மூவாயிரம்) அளிக்க விரும்புவோர் மேற்படி டாலர், மண்டகப்படி, நன்கொடைத் தொகைகளை கிராஸ் செய்த D.D. அல்லது M.O. வில் மட்டும் உதவி காரியதரிசி, அதிஷ்டானம், புதுக்கோட்டை - 622 001 என்ற முகவரிக்கு அனுப்பி வெள்ளி டாலரை பதிவஞ்சலில் பெறலாம். அன்பர்கள் முன்கூட்டியே தொகைகளையனுப்பி பதிவு செய்து கொள்ளவும்.

ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் அருளாணைக்கிணங்க,

(S. ராமச்சந்திரன் B.Sc. (Hons)., D.I.I.Sc., காரியதரிசி,
அதிஷ்டானம், புதுக்கோட்டை - 622 001.)

---

குட்டப்பாளையம் சாமிநாதன் கல்வி அறகட்டளை. (REGD.)

## ஆனூர் வித்யாலயா மெட்ரிகுலேஷன் பள்ளி

(ஹாஸ்டல் வசதி உண்டு)

Recognised by the Govt. of Tamil Nadu.
முத்தூர் P.O. பெரியார் மாவட்டம் - 638 105.
போன் 236 (STD Code 042094)
எல்.கே.ஜி. முதல் 8 - ஆம் வகுப்பு வரை.




- ஆங்கிலம் போதனாமொழி தவிர இந்தி, சமஸ்கிருதம், தமிழ், தியானம், ஓவியம், சங்கீதம், நடனம் கற்றுத்தரப்படும்.
- இறையுணர்வு, நாட்டுப்பற்று, ஒழுக்கம், கட்டுப்பாடு - நமது கலாச்சாரம் - பண்பாடு இவைகளுக்கு முக்கியத்துவம்.
- ஆடியோ - வீடியோ பாட முறை - கம்ப்யூட்டர் பயிற்சி உண்டு.
- பஸ் - வேன் - ஆயா - ஹாஸ்டல் வசதி. 4 - ம் வகுப்பு முதல் ஹாஸ்டலில் சேர்க்கப்படுவர்.
- சமசீரான சைவ உணவு - இயற்கை எழில் சூழ்ந்த (Pollution Free Land) 50 ஏக். பூமி பரப்பளவு - பால் பண்ணையில் இருந்து சுத்தமான பசும்பால்.
- விளையாட்டுகள் - ஊக்குவிக்கப்படும்.
- ஸ்வாமி விவேகானந்தர் - பாண்டி - அன்னை, ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சரின் வழிமுறைகளில் மாணவனை எங்களது தாளாளரின் கல்வி குருவான மேதகு. திரு. சி. சுப்பிரமணியம் அவர்களின் வழியில் "பூர்ண புருஷன்" ஆக்குவதே எங்கள் நோக்கமாகும்.

FOR PROSPECTUS AND APPLICATION SEND Rs. 50/-

**Anoor Vidyalaya**

Matriculation School
MUTHUR (P.O.) 638 105 PERIYAR DIST
PHONE : 236, 321.




● வங்கி உத்யோகத்துக்கான BSRB பரீட்சை எழுத விண்ணப்பித்து இருக்கிறேன். இது பற்றிய விவரங்கள், புத்தகங்கள், அறிவுரைகள் பெற விருப்பம். உதவக் கூடியவர்கள் தொடர்பு கொள்ள முகவரி:

*- சிவகாமி ராமநாதன்,*
*26, சுப்பிரமணி தெரு,*
*புரசைவாக்கம்,*
*சென்னை - 600 007.*

● பிளஸ் டூ வரை படித்த 23 வயது இளைஞனாகிய எனக்குக் காது கேளாது. ஆனால் நன்றாகப் பேச வரும். வேலை வாய்ப்பு நிலையத்தில் பதிவு செய்து ஐந்து ஆண்டுகள் ஆகியும் பயனில்லை. தந்தை இல்லாத வறுமையான குடும்பம். இரக்கமுள்ள தொழிலதிபர் யாரேனும் எனக்கு ஒரு வேலை தந்து வாழ்வளிக்க வேண்டுகிறேன்.

*- ஏ. முத்துராஜ்,*
*கோட்டைகாடு,*
*வள்ளியூர் போஸ்ட்,*
*நெல்லை மாவ. 627 117.*

● கல்கி இதழ்கள் 1950 முதல் 54 முடிய தீபாவளி மலர்கள் உள்பட தேவை. விற்பனை செய்வதானாலும் சரி, அல்லது குறிப்பு எடுத்துக் கொண்டு திருப்பி விட வேண்டுமானாலும் சரி, தொடர்பு கொள்ளவும்.

*- எம். சுப்பிரமணியன்,*
*14, முருகேச நாயக்கர் தெரு,*
*ரங்கராஜபுரம்,*
*சென்னை - 600 024.*

● குடும்பத் தொழிலான தச்சுத் தொழிலில் 35 வருட அனுபவம். ஆலோசகராக (consultant) இத் துறையில் பணியாற்ற இயலும். தேவைப்படுவோர் தொடர்பு கொள்க.

*- ஏ. நந்தகோபால்,*
*36, முதல் தெரு,*
*அண்ணாமலை செட்டியார் நகர்,*
*சென்னை - 600 033.*

● எங்கள் பகுதிக்கு அருகாமையில் தோட்டக்கலை வல்லுனர் யாரேனும் இருப்பின் தெரிவித்தால், நாங்கள் கட்டப் போகும் சொந்த வீட்டில் அழகிய தோட்டம் அமைக்க, அவர் உதவியைக் கோரிப் பெறலாம்.

*- வி. லலிதா,*
*18 C, கர்ண கொல்லை அக்ரஹாரம்,*
*கும்பகோணம் - 612 001.*

● ஆங்கில இலக்கணம், பொது அறிவு பற்றிய சந்தேகங்கள், பயிலும் முறை போன்றவற்றுக்கு இலவச ஆலோசனை வழங்கத் தயாராயிருக்கிறேன்.

*- மா. இளங்கோவன்,*
*2/193-B,*
*வெஞ்சமடை,*
*எஸ்.வி. மில் போஸ்டு*
*- 642 128.*
*உடுமலை வட்டம்,*
*கோவை மா.வ.*

● முப்பதாயிரம் ரூபாய் முதலீட்டில் சுயதொழில் செய்ய முடிவெடுத்துள்ளேன். நல்ல வருமானம் தரக்கூடிய தொழில் பற்றிய ஆலோசனைகள் தேவை. கூட்டுத் தொழில் செய்ய விரும்புவோரும் அணுகலாம்.

*- கோ. வி. நாகரத்தினம்,*
*41-B, சோமநாதன் கோயில் (வடக்கு),*
*வடகட்டளை,*
*வேதாரண்யம் (அஞ்சல்), 614 810.*

● இசைத் தட்டுக்களாக வெளிவந்த நாதமுனி பாண்ட் வாத்திய கோஷ்டியாரின் இனிமையான கர்நாடக சங்கீதப் பாடல்களை டேப்பில் பதிவு செய்து கொள்ள விருப்பம். ஏற்கெனவே பதிவு செய்து வைத் திருந்தாலும் விலை கொடுத்து வாங்கிக் கொள்ளத் தயார்.

*- A. AL. சுப்பையா,*
*4, ரெங்கநாதபுரம் (கிழக்கு),*
*ஸ்ரீரங்கம் - 620 006.*

● ப்ளஸ் டூ படித்து முடித்து விட்டேன். தமிழகத்தில் நடக்கும் பொறியியல் படிப்புத் துறைக்கான நுழைவுத் தேர்வு எழுத எண்ணம். பிரபல டுடோரியல்கள் நடத்திய ''கேள்வி வங்கி'' மற்றும் வகுப்புக்களில் தரப்படும் 'நோட்ஸ்' இவற்றின் தொகுப்பு தேவை. கடந்த ஆண்டுகளின் வினாத்தாள்கள் அனுப்பினாலும் மிக்க உதவியாக இருக்கும்.

*- ஆர். ஸ்ரீதரன்,*
*29/10 கோனார் ஸ்டோர்,*
*அரபிக்குளத் தெரு, திருச்சி.*
*- 620 002.*

(பாலம் மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி நிறுவனம் பொறுப்பேற்க இயலாது.)



# கடலூர் கடற்கரை கவர்ந்திழுக்கிறது!

*யாரும் வருவதில்லை என்ற காரணத்தால் கடலூரிலுள்ள பீச், வெறிச்சோடிக் கிடக்கிறதா, அல்லது பீச் ஒரு வசதியுமின்றி, வெறிச்சோடிக் கிடப்பதால் மக்கள் வருவதில்லையா? - இந்தத் தலைப்பில் ஒரு பட்டிமன்றமே நடத்தலாம்.*

இரண்டு கிலோ மீட்டர் தூரத்துக்கு நீண்டு, பரந்து கிடக்கிறது கடற்கரை. ஜிலுஜிலுவென வீசும் காற்று. அலைகள் ஆடி வந்து கையசைக்கின்றன. ஆனால் கடலூர் வாசிகளில் தேவனாம்பட்டினம் பீச்சுக்கு வந்து ஜாலியாய்க் காற்று வாங்கிப் போவோரின் எண்ணிக்கை மிகவும் குறைவு.

பார்த்தார் கலெக்டர் ராமகிருஷ்ணன். இந்த ஆண்டின் கோடை விழாவை அமர்க்களமாகக் கடற்கரையில் நடத்தி மக்களைக் கவர்வது என்று முடிவு செய்தார். அதற்குப் பின்தான் கடலூர்வாசிகளுக்கே, 'நம் ஊரிலும் இப்படியொரு அழகான பீச் இருக்கிறது; அங்கே சென்றும் நாம் பொழுதைக் கழிக்க முடியும்' என்று ஓர் உணர்வு ஏற்பட்டுக் கொஞ்சம் கொஞ்சமாக வர ஆரம்பித்திருக்கிறார்கள்.

குடும்பத்துடன் வருபவர்களுக்கு வசதியாக, இப்போது, கலெக்டர் உத்தரவின் பேரில், காலை, பகல் நேரங்கள் தவிர மாலையிலும் ஒரு சில பஸ்கள் விடப்படுகின்றன.

அதிக மக்கள் வராததற்கு ஒரு காரணம் அந்தப் பகுதியில் சமூக விரோதிகளின் நடமாட்டம் இருப்பதுதான். இருட்டி விட்டால், அவர்கள் கைவரிசையைக் காட்டுவதுண்டு. கோடை விழாவுக்காக அமைக்கப்பட்ட விளக்குகளையும் அவர்கள் விட்டு வைக்கவில்லை. எனவே, மிகவும் உயரமான விளக்குக் கம்பங்கள் அமைத்து, அவற்றில் ஹாலோஜன் விளக்குகள் பொருத்தித் தரும்படி, நெய்வேலி பழுப்பு நிலக்கரி நிறுவனத்தைக் கலெக்டர் அணுக, அவர்களும் சம்மதித்திருக்கிறார்கள்.

மக்களின் வசதிக்காகக் கடற்கரையில் விரைவில் ஒரு சிற்றுண்டிச் சாலை அமைக்கப்பட உள்ளது. தவிர, இருபத்தைந்து லட்சம் ரூபாய்ச் செலவில் இரண்டு நட்சத்திர ஹோட்டல் ஒன்று கட்டும் திட்டமும் சுற்றுலாத் துறையின் கைவசம் உள்ளது.

கடற்கரையை ஒட்டிய நீர்ப்பகுதியில் 'போட்டிங்' செய்ய முடியும் என்பதால், உள்ளூர் இளைஞர்களுக்குப் படகோட்டும் பயிற்சிக்கான வசதியும் திட்டமிடப்பட்டுள்ளது.

''ஒவ்வொரு பௌர்ணமி இரவிலும் முழு நிலா வெளிச்சத்தில், மக்களுக்கு இனிய பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளும் வழங்கப் படவிருக்கின்றன'' என்றார் கலெக்டர். திட்டங்கள் சிரத்தையுடன் செயல்படுத்தப்பட்டால், கடலூர்வாசிகள் மட்டுமல்ல; வெளியூர்வாசிகளும் கவர்ந்திழுக்கப்படுவார்கள்.

– ஜூலி

# 8

ஒரே ஒரு முடியை வைத்துக் கொண்டு சித்திரக்காரி படம் வரைந்து விட்டாள். நந்தினிக்குப் பாட்டியின் முகம் இருட்டில் தெரியாததே ஒரு ஆறுதலாய்த்தான் இருந்தது. எப்படிக் கண்டு பிடித்தாள்! இவ்வளவு தெளிவாகக் கேட்கிறாளே.

''பாட்டி...?'' என்றாள் திகைப்புடன்.

''த பாரு நந்தினி. நான் எதிர்க்கட்சிக் காரி இல்லே. நீயும் பொண்ணு. நானும் பொண்ணு. பொம்பளைக்குப் பொம்பளைன்னு ஒரு தொடுப்பு எப்பவும் இருக்கும். என்னவோ. தோணிச்சி. கேட்டுட்டேன். எங்கிட்ட மறைச்சிடலாம். நான் மேல கேக்க மாட்டேன். ஆனா நம் மனசுகிட்ட மறைக்க முடியுமா? சொல்லு?''

''எப்படி பாட்டி தெரிஞ்சது?'' என்று அடிபட்ட குரலில் கேட்டாள் நந்தினி. சொந்த சோகத்தைப் பகிர்ந்து கொள்ளப் பாட்டி இருக்கிறாள். சுமைதாங்கி மாதிரி. அவள் மேல் இறக்கி வைத்து இளைப்பாறலாம்.

''நானும் அப்படி இருந்துட்டு வந்தவ தானே? கல்யாணத்தன்னிக்கு அந்தப் பையன் வந்தப்பவே எனக்கு மனசுல கலங்கலாத் தோணிச்சி. அவன் ஒன்னைப் பாத்ததும், நீ அவனைப் பாத்ததும், அவன் கண்ணு கலங்குனதும், ஒன் கண்ணு கலங்குனதும். அப்புறம் அந்தப் படம். அதுல ஒரு கவிதை எழுதியிருந்தானே. அதுல கூட அவன் அதானே எழுதியிருந்தான்? இன்னிக்குக் கேட்டானே. ஒனக்குச் சுயமாகவே முடிவு எடுக்கத் தோணறதில்லையான்னு? சொல்லு அவனை ஏன் கட்டிக்கலை?''

''பாட்டி...''

''சொல்லேன். தேவராஜின் பாட்டின்னு நெனைச்சிக்காம, ஒங்கம்மாளைப் பெத்தவன்னு நெனைச்சிக்கிட்டுச் சொல்லேன்.''

நந்தினிக்கு வார்த்தை எழவில்லை. இருட்டில் தேடிப் பாட்டியின் கையைப் பற்றினாள். தோல் போர்த்திய எலும்பு விரல்கள் அவள் கைகளை ஆறுதலாய் வருடிக் கொடுத்தன. தாங்க முடியாமல் பாட்டியின் மடியில் முகம் புதைத்தாள். பாட்டியின் புடைவையில் நார்ப்பட்டின் பழைய வாசனையும் குழம்புப் பொடியின் வாசனையும். வைரமான அடிமரம் போன்ற எலும்புத் தொடையில், பாட்டி அவள் முகத்தை மெல்ல அழுத்தினாள். முதுகை வருடினாள்.

சுபா

''ராஜாத்தி'' என்றாள்.

நந்தினியிடமிருந்து ஒரு விம்மல்தான் புறப்பட்டது. தன்னிரக்க மிகுதியில் ஏற்பட்ட விம்மல். அருண்குமார் வந்து மறுபடி ஒரு கல்லெறிந்து விட்டான். மனத்தின் மையத்திலிருந்து சலன அலைகள் அடுத்தடுத்துப் புறப்பட்டு விளிம்பு வரை பரவி விம்மலாய் முடிந்தது.

''வீட்ல சொல்லலையா?''

''சொன்னேன் பாட்டி.''

''ஒத்துக்கலையா?''

''இல்ல.''

''நீ சின்னப் பொண்ணு. ஒங்கப்பன் செத்துருவேன்னு மெரட்டியிருப்பான். நீ பயந்துட்டிருப்பே. போவட்டும் வுடு. முடிஞ்சி போச்சி. பழசையெல்லாம் மறந்துடுன்னு சொல்ல மாட்டேன். அது முடியாது. செத்துப் போனவங்க நெனப்பு நாம செத்துப் போறவரைக்கும் அப்பப்ப வந்துக்கிட்டுத்தான் இருக்கும். கூடாதுன்னு சொல்லிட்டா நெனப்பு வராமயா இருக்கும். ஆனா ஒண்ணு. பைத்தியக்காரி மாதிரி ஒன் வூட்டுக்காரன்கிட்ட இதெல்லாம் சொல்லிட்டிருக்காதே.''

''சொல்லாம இருந்தா தப்பில்லையா பாட்டி?''

''ஐயோ. ஐயோ. பாவிப் பொண்ணே. ஒன் தலையில நீயே மண்ணை வாரிப் போட்டுக்கறேன்னு சொல்றியே. தேவராஜ் கோவக்காரன். 'அட மறைக்காம எல்லாத்தையும் சொல்லிட்டியே'ன்னு ஒன்னைத் தோள்ல தூக்கி வெச்சிக்குவான்னு நெனைக்கிறியா? உன்னைப் புடிச்சி வெளிய தள்ளிக் கதவைச் சாத்திடுவான்.''

''ம்.''

''நான் தெரிஞ்சிக்கிட்டேனேன்னு என்கிட்டேயிருந்து தள்ளிப் போய்டப் போறே. தள்ளி கிள்ளிப் போனே, பாக்கு இடிக்கிற உலக்கையாலேயே ஒரு போடு போடுவேன்.''

நந்தினி நிமிர்ந்தாள். பாட்டியின் கன்னத்தில் உதடு ஈரம் படிய முத்தமிட்டாள்.

''இங்க ஏண்டி குடுக்கறே. ஒன் வீட்டுக்காரன்கிட்ட வெச்சிக்க இதெல்லாம். ஒரு கொள்ளுப் பேரனாவது கெடைப்பான் எனக்கு.''

''போங்க பாட்டி'' என்று சிணுங்கிய நந்தினியின் நெற்றிப் பொட்டில் வழித்து எடுத்து, விரல் மடக்கித் திருஷ்டி கழித்தாள் பாட்டி.

புவனேஸ்வரிக்கு வயது பத்தொன்பதைத் தாண்டியிருந்தது. காதல் புகுந்த மனது என்பதால் கள்ளமும் புகுந்திருந்தது. அவளுடைய பொய்கள் அபாரமானவை.

# நிலா மயக்கம்

கலைநயம் மிக்கவை. அம்மாவை மிகச் சுலபமாக ஏமாற்றும் தன்மை கொண்டவை.

''காலைல தையல் கிளாஸ"க்குப் போனாத்தாம்மா எம்ப்ராய்டரியும் சேத்துக் கத்துக்கலாம். கிளி, அன்னம்னு வித விதமாப் போடறதுக்குக் கத்துத் தராங்க. மத்த நேரங்களிலே போனா ஆம்பளைப் பசங்க வந்துடறாங்க. கண்டமேனிக்குப் பாக்கறாங்க. ஒடம்பு கூசுது. நிக்க முடியலே. ஒக்கார முடியலே'' என்று பொய்யை ஹரிச்சந்திரனின் ஷூவிற்குள் நுழைந்து சொல்வாள். அம்மா வாய் பிளந்து கேட்பாள். நம்புவாள்.

பெண் மற்ற ஆண் பிள்ளைகளிடமிருந்து விலகி இருப்பதற்காக இவ்வளவு காலையில் கஞ்சி போட்டுத் தேய்க்கப்பட்ட பருத்திப் புடைவையில் பொம்மை மாதிரி போகிறாள் என்று நினைப்பாள்.

ஷ்யாம் சுந்தரும், அவளுமாக ஏதாவது தியேட்டரில் கிடைக்கும் அரையிருளைச் சாதகமாக்கிக் கொண்டு...

இன்றைக்குக் கூட புவனேஸ்வரி அப்படித்தான் ஒரு பொய்யை எடுத்துத் தொடுத்து விட்டு வெளியே வந்திருந்தாள்.

கால் சரியாகி விட்டது. அன்னி, பாட்டியுடன் கோயிலுக்குப் போயிருந்தாள். அவளுக்கு நழுவிப் போக அதுதான் உத்தமமான சமயம். இன்றைக்கு அலங்காரம் நன்றாக இருக்க வேண்டும் என்று ஷ்யாம் சுந்தர் சொல்லியிருந்தான்.

''உன்கிட்ட கிரீன் யெல்லோ காட்டன் புடைவை இருக்கில்ல?''

''ம்.''

''அதைக் கஞ்சி போட்டு அயர்ன் பண்ணிக் கட்டிட்டு வரணும்...''

''அம்மாடியோவ்.''

''புடைவையை உடம்பில் டைட்டாச் சுத்தி, காலுக்குக் கீழே தழையத் தழைய கட்டேன்னு வக்கக்க. எல்லோரும் பார்ப்பாங்க.''

''பார்த்தா?''

''எம்மேலே பொறாமைப் படுவாங்க. பார்ரா இந்தக் குதிரை மூஞ்சிக்கு எவ்.ளோ



அம்சமா ஒரு குட்டி மாட்டியிருக்குதுன்னு வெந்து போவாங்க.''

''என்னது? குட்டி, கிட்டின்னு...''

''நீ என் சர்க்கரைக் குட்டிதானே. அச்சு வெல்லக் கட்டிதானே?''

அவன் சொன்ன மாதிரி எலுமிச்சை மஞ்சளில் இலைப் பச்சை டிஸைன் தெறித்த புடைவை கட்டியிருந்தாள். இடுப்புச் சரிவு மின்னுகிற மாதிரி கொஞ்சம் இறக்கிக் கட்டியிருந்தாள். கரும் பச்சையில் ஒரு ரவிக்கை. தலைமுடியைக் குதிரை வால் போல் நீட்டியிருந்தாள். பின்னந் தலையில் கரும் பச்சைப் பட்டாம்பூச்சி போல் ரிப்பன் முடிச்சு.

காலை பத்து மணிக்கே தொடங்கிய பொருட்காட்சி ஒன்றில் அவர்கள் நுழைந்தார்கள்.

அந்தக் கும்பலில் ஷ்யாம் சுந்தரும் - புவனேஸ்வரியும் கைகோத்தபடி ஊர்ந்தார்கள். காதலிக்கையில் விரல் ஸ்பரிசமே சொர்க்கம். புடைவை நுனியின் தீண்டலே கிறக்கம். காதலியின் முகத்து வியர்வை பன்னீர். அவளுடைய தோள் பட்டையை அவன் கை பற்றியிருந்தது. அவளும் அவனும் பரஸ்பரம் தேகங்களில் மின்சாரப் பாய்ச்சலைப் பெற்றுக் கொண்டிருந்தார்கள்.

சோப்பு நீர்க் குமிழிகள் மைதானமெங்கும் அலைபாய்ந்தன. கோன் ஐஸ்க்ரீம்கள் குழந்தைகளின் உதடுகளை ஷேவிங் சோப்பு போல் பூசியிருந்தன. ஜயண்ட் வீல் வானத் திரையைத் தொட்டு மீண்டது. உட்கார்ந்திருந்தவர்கள் பயமும், மகிழ்ச்சியும், த்ரில்லும் கலந்து கூச்சலிட்டார்கள்.

மிக்ஸி கடையில் காய்கறிகள் துண்டாடப்பட்டன. அல்ட்ராவும் அல்ட்ரா அல்லாத சோப்புத் தூளும் போட்டியிட்டன. வாக்குவம் கிளீனர் பார்வையாளர்களின் கைப்பை மேலிருந்த தூசியை உறிஞ்சி பிரமிப்பு ஏற்படுத்திக் கொண்டிருந்தது.

புவனேஸ்வரிதான் அந்தக் கடைசிக் கடையால் ஈர்க்கப்பட்டவள். காகம், கழுகு, முயல், முள்ளம் பன்றி, சிங்கம், சிறுத்தை, பசு, பாப்பா என ஏராளமான ரப்பர் பொம்மைகள். வெளிச்சமற்ற இரவில் தானாகவே ஒளிரக்கூடிய பொம்மைகள் என்று கடை ஆசாமி மைக்கில் மற்றவர்களை அழைத்தார்.

புவனேஸ்வரி ஷ்யாம் சுந்தரை இழுத்துக் கொண்டு, கூட்டத்தைப் பிளந்து, உள்ளே நுழைந்தாள். கடையில் இருந்த ஒவ்வொரு பொம்மையாய்ப் பார்த்து, பிடித்திருக்கிறது என்று ஒரு முயல் பொம்மையை எடுத்துக் கொண்டாள்.

''எவ்வளவுப்பா?'' என்றான் ஷ்யாம் சுந்தர்.

''நூத்தி அஞ்சு ரூவா'' தேவராஜின் குரல்!

புவனேஸ்வரி திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தாள். தேவராஜ் இறுக்கமான முகத்துடன் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். ஏற்கெனவே கோபக்காரன். இப்போது குளவி கொட்டிய குரங்காய் அவளுக்குத் தெரிந்தான்.

ஷ்யாம் சுந்தர் பணத்தை நீட்டி, முயல் பொம்மையை எடுத்துக் கொண்டு செல்லமாக, ''வா பூன்'' என்று சொல்லி அவளுடைய தோளில் கைவைத்து உரிமையுடன் ஸ்டாலை விட்டு நகர, புவனேஸ்வரி துடிக்கும் இதயத்துடன் ஸ்டாலை விட்டு விலகினாள்.

''பளார்!''

அறை விழுந்த கன்னத்தைப் புவனேஸ்வரி உள்ளங்கையால் தேய்த்துக் கொண்டாள். தேவராஜின் நான்கு விரல்களும் அவள் கன்னத்தில் ரத்தத் தீற்றலாகப் பதிந்தன.

வீட்டில் இருந்த அத்தனை பேரும் பதறினார்கள். தேவராஜைத் தடுத்தார்கள்.

''என்ன ஒரு திமிரு இருந்தாப் படிக்கிற வயசுல உனக்கு இப்படி புத்தி போவும்?''

''டேய் தேவராஜு, ஏன்டா கொழந்தையைப் போட்டு அடிக்கறே? அப்படி என்னடா பண்ணிட்டா அவ?''

''கொழந்தை, இன்னொரு தடவை கொழந்தை, கிழந்தைன்னு சொன்னே ஒம் பல்லைத் தட்டிக் கையில குடுத்துடுவேன், ஏய், யாரீ அவன்?''

''ஷ்யாம் சுந்தர்.''

''மூதேவி! பேரையா கேட்டேன். மண்ணாங்கட்டி, மலைன்னு எது வேணா இருக்கட்டும். அவன் யாரு, ஒனக்கு என்ன வேணும்?''

''நான் அவரை லவ் பண்றேண்ணா.''

''எடு செருப்பை. லவ்வா, எங்கிட்டியே... எங்கிட்டயே...''

''டேய் தேவராஜு. டேய் தேவராஜு. அவளை அடிக்காதப்பா அடிக்காதப்பா.''

''இனிமே இந்த வூட்டு வாசப் படியைத் தாண்டு நீ... ஒங்காலை உடைச்சி அடுப்புல வெக்கல எம் பேரு தேவராஜ் இல்லே. லவ்வாடி பண்றே? ஒனக்கு லவ்வுன்னா என்னன்னு தெரியுமா? ஏய் நந்தினி. இந்தா. இவளை ரூம்ல போட்டு கதவைச் சாத்து. பச்சைத் தண்ணி கூட பல்லுல படக்கூடாது. வயிறு காய்ஞ்சாத்தானா லவ்வெல்லாம் தெளிஞ்சி போய்டும்.''

(தொடரும்)

# பொறுப்பு

**வ**க்கீல் வீட்டு ஆயுஷ்ஹோமத்துக்காகச் சென்றிருந்த காமாட்சி இன்னும் வீடு திரும்பியிருக்கவில்லை. என்றைக்கோ தன் வாழ்வில் நிகழப் போகும் சுபகாரியத்துக்காகக் காத்துக் கொண்டிருக்கும் மங்க, திருவல்லிக்கேணி ஒண்டுக் குடித்தனத்தின் வராந்தா பகுதியில் உட்கார்ந்து காய் நறுக்கிக் கொண்டிருந்தாள்.

அப்பொழுதுதான் வைத்தி கதவைத் தட்டினான்.

திறந்தவளைக் கண்டதும் ஒருகணம் பிரமித்தான். கண்ணைக் கவரும் அழகை அவன் எதிர்பார்க்கவில்லை.

''யார் வேணும்?''

''இது ருக் காமாட்சியம்மாள் வீடா?''

''ஆமாம். நீங்க யார்? என்ன வேணும்?''

''என் பெயர் வைத்தி. டெலிபோன் எக்ஸ்சேஞ்சில் வேலை பார்க்கிறேன். நீங்க அவர் பெண்ணாகத்தான் இருக்கணும். மங்களாதானே உங்க பேர்?''

''ஆமாம். உங்களுக்கெப்படித் தெரியும்?''

''கல்யாணச் சந்தையில ஜாதகத்தை உலவ விட்டுட்டு எப்படித் தெரியும் என்று கேட்டா எப்படி?'

மங்க பேசத் தெரியாது குழம்பினாள். குப்பென்று வியர்த்தது. பார்வையைத் தாழ்த்தினாள்.

''அம்மா வந்தப்புறம் பேசுங்களேன்.''

''பின்னே? உங்களிடம் பேச முடியுமா? உங்களுக்கு அம்மா இருக்கிறாள்! உங்களுக்காகப் பேசுவாள். எனக்கு யாரும் இல்லே! நானேதான் என் கல்யாண விஷயம் பற்றிப்பேச வேண்டும்'' என்றான் வைத்தி நிதானமாக.

நல்லவேளை. பதில் சொல்வதற்குள் காமாட்சியம்மாள் வந்து விட்டாள். மங்களாவிற்கு அப்பாடா என்றிருந்தது.

''மங்க யாரோ வந்திருக்கிறாப் போல இருக்கே! இந்தா இந்தப் பட்சணங்களைக் கொண்டு வை. மாமிக்குத் தாராளம் போறாது. இதைக் கொடுக்க ஏக யோசனை.''

மங்களவுக்கு முகம் சிவந்தது. தான் ஏதோ ஐந்து வயதுக் குழந்தையைப் போல, இதற்கெல்லாம் சபலப்படுவது போல அம்மா ஏன் நினைக்கிறாள்?

பலகாரங்களைச் சமையலறையில் வைத்து விட்டு, அவர்கள் பேச்சில் கவனம் செலுத்தும் வகையில் தூணருகே நின்று கொண்டாள்.

''நமஸ்காரம் மாமி. என் பெயர் வைத்தியநாதன். டெலிபோன்ஸ்ல நிரந்தரமான வேலை. வயசான தாயார் இருக்கா. கண் தெரியாது. அவளால் பெண் பார்க்க வர முடியாது. அதனால் நானே வந்தேன்.''

''அந்த வரன் நீங்கதானா? நம்ம தரகர் சொன்னார். நான் இன்னும் ஜாதகமே பார்க்கலையே. நீங்க பெண் பார்க்கவே வந்துட்டேள்!''

''அப்படியா? ஜாதகம் கொடுத்துப் பதினைந்து நாள் ஆயிடுத்து. பாத்திருப்பேள்னு நினைச்சேன்.''

''சமயம் வரலே. அதான் பார்க்க முடியலே. இந்த மாசம் முகூர்த்தங்கள் நிறைய இல்லையா. ஏகப்பட்ட வேலை.''

''எனக்கு ஜாதகத்தில் நம்பிக்கை கிடையாது. நீங்க பார்த்தால் போதும்.''

''பகவான் நினைச்சா எல்லாம் கருக்கமா நடக்கும். வயசு வித்தியாசம் வேறே எக்கச்சக்கம். என் பொண்ணுக்கு இருபத்தியாறுதான் ஆகிறது.''

''எனக்கு முப்பத்தியெட்டுத்தானே ஆகிறது? என் மேலே திணிக்கப்பட்டிருந்த பொறுப்புகளை இப்பத்தான் முடிச்சேன். அப்பாடி என்று பெருமூச்சு விட இப்பத்தான் நேரம் வந்தது.''

''அது சரி. உங்களுக்கு என்று இனிமேலா பிறக்கப் போறா? பகவான் நினைச்சா நிறுத்த முடியுமா? என் பெண்ணுக்குச் சரியாப் பாத்தா இருபத்தி ஐந்துதான் பூர்த்தியாயிருக்கு.''

''சரி. நீங்க யோசிச்சுச் சொல்லுங்கோ. எனக்கு முப்பத்தியெட்டு வயசாறது. மறைக்கல. மூன்று தங்கைகளுக்குக் கல்யாணம் பண்ணுவதற்காகவே டெல்லியில் கிடைத்த வேலையை விட்டேன். ஒண்டுக் குடித்தனம் கல்யாணத்துக்கு லாயக்குப் படாது. தனி ரூம் கிடையாது. ஒருவழியாகத் தங்கைகளைக் கரை சேர்த்த பிறகுதான் கல்யாணம் என்று முடிவு செய்தேன். இப்போ எல்லாக் கடமைகளும் முடிஞ்சாச்சு. ஒரு வீடு பாத்து வச்சிருக்கேன்.

புஷ்பா கந்தசாமி

எனக்கு ஒரு ரூம். அம்மாவுக்கு ஒரு ரூம். சமையலறை. சின்ன ஹால், டீவி வைக்க வசதியாக. உங்க பொண் கண்கலங்காம இருக்கலாம்.''

''அதெல்லாம் சரிதான். நான் இன்னும் ஜாதகப் பொருத்தம் பார்க்கலே.''

''பாருங்கோ. பாருங்கோ.''

''என் பொண்ணுக்கு முப்பது ரொம்பியிருந்தாக் கூட கவலைப்பட மாட்டேன். பிராப்தம் இருந்தா நடக்கும். நீங்க ஏன் மனசைப் போட்டுக் குழப்பிக்கிறேள்?''

''நீங்க பிடி கொடுக்காமல் பேசறது புரியறது. இதுக்கு மேலே நான் விவாதம் பண்றது விவேகம் இல்லே. எதுக்கும் நீங்க ஜாதகம் பாத்துச் சொல்லியனுப்புங்கோ.''

''ஆகட்டும். நீங்க போயிட்டு வாங்கோ!''

காமாட்சி அவனைப் பலவந்தமாக வெளியே அனுப்பி விட்டு வந்தாள். உள்ளே மங்க வெறித்த பார்வையுடன் நின்றிருப்பது தெரிந்தது. புறாக் கூண்டில் அடைபட்டுக் கிடந்தாலும் அவள் முகத்தில் என்ன ஜொலிப்பு; உடம்பில் என்ன வாளிப்பு! காமாட்சியின் கண்ணே பட்டு விடும் போல. யார் வந்து ஆளப் போகிறானோ, பகவான் ரொம்பக் காக்க வைக்கிறான்.

''கொஞ்சம் ஃபேனைப் போடுடி மங்க. எண்ணெய்ப் புகையில் நின்னது தலை கத்தறது. யார் வந்தாலும் நீயே பதில் சொல்லி விடு. நான் படுத்துக்கறேன்.''

மங்கவின் மனம் அந்த வைத்திய நாதனையே சுற்றிச் சுற்றி வந்தது. கெஞ்சுகின்ற தொனியில் அவன் குரலும், பொறுப்புகளைச் சுமந்த பாரத்தில் களையிழந்த அவன் முகமும் சஞ்சலத்தை உண்டு பண்ணின. ஏதேதோ சிந்தனைகளில் மனக அலைபாய்ந்தது. உடம்பில் திடீரென்று ஒரு வேகம் தாக்க, தூங்கும் காமாட்சியை எழுப்பினாள்.

''அம்மா எழுந்திரு.''

''என்னம்மா ஆச்சு?''

''எழுந்திரேன் சொல்றேன்.''

''சரி எழுந்தாச்சு.''

''உனக்கு எத்தனை குழந்தைகள்?''

''என்ன அசட்டுத்தனமான கேள்வி இது?''

''பதில் சொல்லு?''

''மூன்று. இரண்டு பொண்ணு. ஒரு பையன்!''

''உன் பையன் எங்கே?''

''அவன் எங்கோ வடக்கில் வேலை பார்க்கிறான்.''



''நீ அங்கே போயிருக்கியா?''

''அவன் கூப்பிட்டாத்தானே?''

''ஏன் கூப்பிடவில்லை?''

''நான் போனால் என் தேவைகளைப் பூர்த்தி செய்ய வேண்டி வரும். அவன் சேமிப்பு அதோகதிதான்.''

''அப்படி என்ன செலவு வச்சிருக்கே?''

''என்ன அப்படிக் கேட்டுட்டே. உன் கல்யாணம். லதாவுடைய ப்ளஸ் டூ படிப்பு. வீட்டு வாடகை. என் அல்சருக்கு வைத்தியம் இத்யாதி. செலவுகளுக்கா பஞ்சம்?''

''அப்போ நம்மிடமிருந்து ஒதுங்கிக் கொண்டு ஹாய்யாக இருக்கிறானா?''

''அந்த வயித்தெரிச்சல்தானேடி எனக்கு அல்சர் வரக் காரணம்.''

''ஏன் அவனை நம்பாமல் உன்னால் சமாளிக்க முடியாதா?''

''என்னடி, குடும்பத்து மூத்த பிள்ளை. பொறுப்பு வேண்டாமா? ஏதடா இரண்டு தங்கைகளுக்குக் கல்யாணம் கார்த்திக்கு



''யோவ், 105... வரவர உன் தொல்லை அதிகமாப் போச்சுய்யா!''

''என்ன சார் மேட்டர்?''

''பக்கத்து வீட்டுக் குழந்தை மூணு சக்கர சைக்கிள்ல லைட் இல்லாம போனதுக்கு மாமூல் கேட்டுத் தகராறு பண்றியாமே!''

- சேலம் நீலமேகம்

நம்மால முடிந்ததைச் செய்வோம்னு நினைக்க வேண்டாமா?''

''அவன் ஏன் அப்படி நினைக்கணும்?''

''பின்ன என்னடி? அப்பாவுக்குக் குடும்பச் சிந்தனையே கிடையாது. அம்மா கஷ்டப்படுகிறாளே என்ற பச்சாத்தாபம் இருக்க வேண்டாமா?''

''அப்படி இருந்தால் என்ன செய்திருப்பான்?''

''உங்களுக்கு ஒரு வழி பண்ணாமல் தான் கல்யாணம் செய்திருப்பானா? ஒரு குழந்தையைப் பெத்திருப்பானா?''

''எங்க ரெண்டு பேருக்கும் கல்யாணம் பண்ணி அப்புறம்தான் அவனுக்கு வாழ்க்கை என்றால் என்ன வயசாகும் அவனுக்கு?''

''என்ன சொல்ல வருகிறாய் மஞ்சு?''

''பதில் சொல்லேன்.''

''இப்போ முப்பது. மூணுமே பத்து வருஷம் கூட ஆகலாம்.''

''அப்படி வா. அப்போ உன் பிள்ளை எப்படியிருப்பான்?''

''நாப்பது வயசிலே கல்யாணம் பண்ணிக் கொள்வான். பாவம். தங்கைகளுக்காக இளமையை விரயம் பண்ணியிருப்பான். அவனுடைய பெண்டாட்டியை என் இதயம் வாழ்த்தும்.''

''அப்படி உன் பெண்ணை ஒரு தாய் வாழ்த்தட்டுமே!''

''என்னடி சொல்கிறாய்?''

''தங்கைகளுக்காக இளமையை வீணாக்கிய முப்பத்தியெட்டு வயது பொறுப்பான ஆண் பிள்ளையை உன் பெண் கல்யாணம் செய்து கொள்கிறேன், என்கிறாள்.''

''டீ. அது வேறே. இது வேறே.''

''எப்படி வேறாகும்? உன் பிள்ளைக்குப் பொறுப்பு இல்லை என்று குறை சொல்லும் அதே நேரத்தில், பொறுப்பு அதிகம் உள்ளவனை மாப்பிள்ளையாக அங்கீகரிக்க மறுக்கிறாய்!''

''உனக்குக் கல்யாணம் தள்ளிப் போறது என்று இந்த முடிவை எடுக்கிறாயா?''

''இல்லை. ஆசையையும் பாசத்தையும் கொட்டப் போகிற ஒரு நல்ல புருஷனை இழந்து விடக் கூடாது என்கிற புத்திசாலித்தனத்தால்தான் இந்த முடிவை எடுக்கிறேன்.''

காமாட்சியம்மாள் கண்களைத் துடைத்துக் கொண்டாள். மஞ்சு நிச்சயம் அவளை விட அதிர்ஷ்டசாலி. இனி சம்பிரதாயங்கள் தேவையில்லை. ''வைத்தியநாதன் வீட்டு விலாசத்தை எடு, மஞ்சு. உடனே அவருக்கு எழுதறேன்!'' என்றாள் காமாட்சியம்மாள்.

## ஆச்சரியமளிக்கும் பூங்கா!

கடலூர், சுப்புராயலு பூங்கா, பராமரிக்கப்படும் விதம் பாராட்டுக்குரியது. வண்ண வண்ணப் பூக்கள், பச்சைப் பசேலெனச் செடிகள், புல்தரை, குழந்தைகள் விளையாடச் சறுக்கு மரம் என்று மாலைப் பொழுதை மகிழ்ச்சியாய்க் கழிக்கலாம். இதற்கான பாராட்டுக்கு உரியவர்கள், கடலூர் சுற்றுப்புறச் சூழல் கழகத்தினர்தாம். ''இந்தப் பூங்காவை இன்னும் அழகா ஆக்கணும்னு எனக்கு ஆசைங்க!'' என்று கொளுத்தும் வெயிலிலும், செடிகளுக்குத் தண்ணீர் பாய்ச்சிக் கொண்டிருந்த தோட்டக்காரர் ஓர் ஈடுபாட்டுடன் சொன்ன போது, மனசுக்கு ரொம்பச் சந்தோஷமாக இருந்தது. அது இருந்த இடம் தெரியாமல் போய்ச் சோகம் கவ்விக் கொண்டது, கடலூர், காமராஜர் பூங்காவைப் பார்த்த போது.





# KVB அளிக்கும் நிகரற்ற வட்டி! 13%





உங்கள் டிபாசிட்டுகளுக்கு இப்போது KVB அளிக்கும் வட்டி விகிதங்கள் இதோ:

| டிபாசிட் காலம் | வட்டி விகிதம் (22-4-92 முதல்) |
|---|---|
| 46 நாட்கள் முதல் 2 வருடங்கள் வரை | 13% |
| 2 வருடங்களுக்கு மேல் ஆனால் 3 வருடங்களுக்குள் | 12.75% |
| 3 வருடங்களுக்கும் அதற்கு மேலும் | 13% |
| சேமிப்புக் கணக்கு | 6% (24-4-'92 முதல்) |

மேலும் விபரங்கள் பெற, எங்கள் 158 கிளைகளில் உங்கள் அருகாமைக் கிளையை அணுகுங்கள்.
KVBயில் டிபாசிட் செய்து அதிக லாபம் பெறுங்கள்.



## கரூர் வைஸ்யா பாங்க்

கரூர் - 639 002

B. பாஸ்கரன்
சேர்மன்

கனவுகளை நனவாக்கிய 76 ஆண்டுகள்

# கல்லாத பேர்களே நல்லவர்கள்

அமிழ்தம் போல் தித்திக்கும் துரியோதனன் வீட்டுப் பால் பாயசத்தை விட, விதுரன் வீட்டு உப்புக் கஞ்சிதான் கண்ணனுக்குப் பிடித்தது. நம் படிப்பும் அறிவும் நிறைமையும் அற்பமானவை என்ற பணிவுதான் பரமபக்தியின் அடையாளம். ஆணவம், அகங்காரம் என்பவை சமய சாம்ராஜ்யத்தில் நாடு கடத்தப்பட்ட அகதிகள். அன்பு, பணிவு, தாஸ்யம் எனப்படும் தொண்டுமனம் இவையே இறையுலகின் குடியுரிமைத் தகுதிகள்.

மீனைக் கொண்டு வந்தார் படிப்பறிவற்ற குகப்பெருமாள். ''பரிவினில் தழீஇய என்னில் பவித்திரம்'' என்கிறார் ஸ்ரீராமன். பகவானுக்குப் பன்றி மாமிசம் படைத்தார் கண்ணப்பர். ''அன்பினால் அவன் யாது செய்யினும் நமக்கு அது உகப்பு'' என்கிறார் சிவபெருமான். கங்கை வேடனும் காளத்தி வேடனும் பக்தி வலையில் பரமனையே இழுத்து விட்டவர். ஆணவம் கலவாத அன்புக்கு இறைவன் அடிமை... ஆணவம் எப்படித் தோன்றுகிறது?

உடம்பு கொஞ்சம் அழகாக, இளமையாக, எடுப்பாக, நிறமாக இருந்தால் போதும்... அகங்காரம் அந்த உடம்பைத் தன் முகவரியாக்கி விடும். ஆனால் வயது ஏற ஏற அந்த அகந்தை அழியும்; இரைப்பையும் இருதயப்பையும் தத்தம் முதுமையை உணர்த்தியபின், இருமலும் சளியும் கட்டிப் புரண்டு, கடும் யுத்தம் நடத்தியபின் உடம்பைப் பற்றிய அகங்காரம் ஓடி விடும்.

பணத்தாலும் பதவியாலும் அகந்தை வரும். செல்வமும் செல்வாக்கும் தொலைந்து போனால், அந்த அகந்தையும் அழிந்து போகும். படிப்பாலும் கல்வியாலும் வருகிற அகங்காரம் இருக்கிறதே அது அழியாது! இந்த அறிவு வெறும் அறியாமை என்று அடுத்தவர் அறிவால் அடி வாங்கினால் ஒழிய, இது அழியாது. 'சுட்ட பழம் வேண்டுமா சுடாத பழம் வேண்டுமா?' என்ற கேள்வி, ஔவையின் அறிவில் விழுந்த அடி.

பிரம்மனை முருகன் குட்டினான் என்ற கந்தபுராணக் கதை இந்தக் கருவின் விளக்கமே. பல பேர் புராணம் சொல்லும் போது, பிரம்மன் தன்னை வணங்கவில்லை என்ற கோபத்தினால் முருகன் பிரம்மனைத் தண்டித்ததாகச் சொல்கிறார்கள். அது பிழை. அப்படிப் பார்த்தால் முருகனை வணங்காத மக்கள் பலர் உண்டு. தன்னை வணங்காத அவர்கள் எல்லோரையும் முருகன் தண்டிப்பாரா? அவர் என்ன அரசியல்வாதியா? தன் துதிபாடாதவரை எல்லாம் தண்டிக்க... கலைமகள் கணவனான, சதுர்வேதங்களுக்காகவே சதுர்முகம் கொண்டவனான பிரம்மாவின் அறிவும் அறியாமை உடையதே! அதனை உணர்த்தவே பிரம்மனைக் கேள்வி கேட்டு முருகன் தண்டிக்கிறான்.

ஒரு பள்ளி ஆய்வாளர் வண்ணப் புத்தகத்தில் யானையின் படத்தைக் காட்டி ''இது என்ன?'' என்று மாணவர்களைக் கேட்டார். சின்னப் பிள்ளைகள் எல்லாம் மகிழ்ச்சியான குரலில் ''யானை!'' ''யானை!'' என்றார்கள். ''வெரிகுட்..... இது யானை'' என்று சொல்லிக் கொண்டு, அடுத்த வகுப்பை நோக்கி நடந்தார். ஒரே ஒரு சின்ன மூளைக்கு தைரியம். மெல்ல எழுந்து நின்று சொன்னான்: ''சார்... நீங்கள் சொன்னது தப்பு... அது யானை அல்ல...'' பள்ளி ஆய்வாளருக்குப் பயங்கரக் கோபம். ''அது யானை இல்லையா... அப்படி என்றால் அது என்ன? நீதான் சொல்லேன்.'' பையன் பேசினான் : ''ஐயா அது யானை அல்ல... யானையின் படம்!'' ஐம்பது வயது மூளை அப்படியே வெட்கத்தால் செத்தது! உண்மைதானே. அது யானையா? யானையின் படம்தானே அது! பிஞ்சு மூளையில் உதித்த அறிவு தமது அறியாமையை உணர்த்தி விட்டதே!

கல்வியின் பெருமையே அறியாமையை அறிவதுதான். அடக்கமும் பணிவுமே கல்வியின் அடையாளங்கள். ''நுணங்கிய கேள்வியர்... வணங்கிய வாயினர்'' என்பது திருவள்ளுவரின் தீர்மானம். புத்தக விழுங்கலால் வரும் அறிவுகளில் அகங்காரம் கொடி கட்டிப் பறப்பது கண்கூடு. அதனால்தான் தாயுமானவர் ''கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்''

என்று கடவுளின் செல்லப் பிள்ளைகளை அடையாளம் காட்டினார்.

**ச**ங்கர விஜயத்தில் ஓர் அழகான கதை. பத்மபாதர் என்ற பட்டப் பெயர் பெற்ற சனந்தனர் என்ற சீடர் ஒருவர் சங்கரருக்கு உண்டு. அஹோபிலத்தில் - அடர்ந்த ஆரண்யத்தில் - வலை வலையாக, இலை இலையாக வனமே பின்னி வைத்திருந்த இருட்டுப் பந்தலுக்குக் கீழே நரசிம்மர் அருள் வேண்டி தவம் செய்கிறார் அவர். ஊர் உலகின் இடையூறு இன்றி, ஊண் உறக்கமின்றிக் கடுந்தவம் செய்து, கடவுள் அருள் பெறுவது அவர் நோக்கம். இமைக் கதவுகளைத் தாழ் இட்டு, இதயக் கதவுகளைத் திறந்து வைத்து, நரசிம்மருக்கான மந்திரத்தை உதடு உச்சரிக்க, எப்படியும்



மந்திர பலத்தால் நரசிம்மர் தரிசனம் உண்டு என்று உறுதியாக இருந்தார் அவர்.

வேட்டைக்கு வந்த காட்டு மனிதனுக்கு இந்தக் காட்சி வேடிக்கையாக இருந்தது. மேலும் கொடிய மிருகங்கள் திரியும் காட்டிலே இப்படிக் கண்மூடி ஒருவர் உட்கார்ந்திருப்பது ஆபத்தாயிற்றே! கேலியாய்ச் சிரிக்கத் தொடங்கியவன், கருணையாய்ச் சிரித்து முடித்தான்.

"ஐயோ... இது என்ன பைத்தியக்காரத் தனம். கண்ணை மூடிக்கிட்டு காட்டில என்ன பண்ற... கனவு காண்றியா?" பாமரத் தனம் அவன் பாஷையில் படை எடுத்தது.

அகிசிவம்

கண்ணைத் திறந்தார் சனந்தனர். அவன் அறிவீனத்தைப் பார்த்து அவர் அறிவு நகைத்தது. 'தவம்' என்பதை அவனுக்கு எப்படிப் புரியவைப்பது? வேதமும் சாஸ்திரமும், கடவுள் கல்வியும் என்னவும் இல்லாத காட்டு மனிதனுக்குத் தவத்தை எப்படிப் புரிய வைப்பது? அவன் பாஷையிலேயே சொன்னார்... "ஒரு மிருகத்தைத் தேடி வந்தேன்... அதைத் தேடுகிறேன்."

"ஐயோ... கண்ணை மூடிக்கிட்டா எப்படி சாமி மிருகத்தைப் புடிக்க முடியும்... மிருகம்ல உன்னைப் புடிச்சிரும்.. கண்ணைத் திறந்து தேடு சாமி..." வேடுவன் அன்பொழுகச் சொன்னான்.

"அப்பா அந்த மிருகத்தைப் பற்றி உனக்குத் தெரியாது... எனக்குத்தான் தெரியும். கண்ணை மூடிக் கொண்டு தேடினால்தான் கிடைக்கும்!" அவர் கல்வி சவால் விட்டது.

"மிருகத்தைப் பத்தி என்கிட்ட சொல்லறியா சாமி... அந்த மிருகம் என்ன மிருகம்னு சொல்லு... நான் போய் நொடியில புடிச்சிட்டு வாரேன்."

வேடுவன் ஆர்வத்தைப் பார்த்து, பத்மபாதரின் ஆணவம் சிரித்தது. 'யுகம் யுகமாய்த் தவம் செய்து தேடித் தெரிய முடியாத நரசிம்ம தெய்வத்தை இவன் நொடியில் பிடிப்பதாவது? முட்டாள்...'

"சிங்கத் தலை... மனுஷ உடம்பு... பிடிக்க முடியுமா உன்னால?" சீறினார் பத்ம பாதர்.

'அப்படி ஒரு மிருகம் உண்டா? இது வரை பார்த்தது இல்லையே' என்று சந்தேகப்பட்டாலும் அந்தணர் பொய் சொல்ல

மாட்டார் என்று உண்மையாக நம்பினான் வேடுவன்.

''நாளைக்குள்ளாற புடிச்சி உன் முன்னாடி நிறுத்தல, நான் செத்தே போய்டுவேன், ஆமாம்!'' சபதமிட்டான் வேடுவன்.

பத்மபாதர் ஆணவம் மீண்டும் சிரித்தது.

''சிங்கத் தலை... மனுஷ உடம்பு... சிங்கத் தலை மனுஷ உடம்பு.'' அதே ஜெபம்... அதே தேடுதல். ஊண் இல்லை உறக்கம் இல்லை... வேறு எண்ணம் எதுவும் இல்லை. காட்டின் இண்டு இடுக்கெல்லாம் புகுந்து அந்த நரசிம்மத்தைத் தேடி அலைந்தான் வேடுவன். இரவும் தீப்பந்தம் ஏந்தி, வளைய வளைய வந்து, ஒரு வெறியுடன் ''சிங்கத் தலை... மனுஷ உடம்பு'' என்று தேடித் தேடி அலைந்தான். பாவம், மறுநாள் அந் நேரம் வரை தேடியும் கிடைக்கவில்லை.

'அந்தணர் பொய் சொல்ல மாட்டார். நாம்தாம் வாக்கின்படி அந்த மிருகத்தைத் தேடிக் கொடுக்கவில்லை' என்று முடிவு செய்து, தூக்கில் தொங்கத் தீர்மானித்துக் காட்டுக் கொடிகளைக் கயிறாகத் திரித்துத் தலையை நுழைத்தான் வேடுவன். சத்தியத்துக்காக உயிர்விடத் துணிந்தான். அடுத்த நிமிடம் காடே அதிரும்படியான சிரிப்பொலி... 'செங்கட்சீயம்' என்ற கம்பன் கவிதைப்படியே 'ஹஹ்ஹா' என்று சிரித்தபடி நரசிம்மம் எதிரில் நின்றது! தேடி அலைய வைத்த காரணத்தால், அந்தச் சிங்கத்தை உரிமையோடு இரண்டு அடி வைத்து, காட்டுக் கொடிகளால் கட்டி, சனந்தனர் முன் கொண்டு நிறுத்தினான்.

''ஐயரே... இதுதானே நீ கேட்ட சிங்கத் தலை... மனுஷ உடம்பு!'' கர்ஜித்தான் வேடன்.

அறிவு கொடுத்த அலட்சியத்தோடு விழிகளைத் திறந்தார் சனந்தனர். வெறும் காட்டுக் கொடிகள் மட்டும் தெரிந்தன. அவர் சிரித்தார். ''உனக்கென்ன பைத்தியமா? எங்கே இருக்கிறது சிங்கத்தலை? எங்கேயிருக்கிறது மனுஷ உடம்பு?''

''இதோ, இதோ'' என்று தடவிக் காட்டினான் வேடுவன்.

சனந்தனருக்குத் தெரியவில்லை. ''இல்லையே'' என்றார்.

நரசிம்மம் மீண்டும் சிரித்தது. வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தார் பத்மபாதர்.

''கல்விச் செருக்கு உன் கண்களை மறைக்கிறது சனந்தா... பலநாள் தேடியும் உனக்கு அகப்படாத நான், இவனுக்கு அகப்பட்டது ஏன் தெரியுமா? ஏகாக்ர சித்தத்தோடு என்னைத் தேடுவது மட்டுமே லட்சியமாய்க் கொண்டு கள்ளம் கபடமற்ற நம்பிக்கையோடு தேடினான். எனவே அகப்பட்டேன்.''.

சனந்தனரின் கண்கள் பனித்தன.

''என் குரலைக் கேட்கும் பாக்கியம் நீ எப்படிப் பெற்றாய் தெரியுமா?'' - நரசிம்மம் நிறுத்தியது.

கண்களில் நீர் மல்க, ''சொல்லுங்கள் ஸ்வாமி'' என்றார் சனந்தனர்.

''இவனுடைய சம்பந்தம் உனக்கு இருந்ததே... அந்தப் பாக்யத்தால்தான்!'' என்றார் பெருமாள்.



*சிறுவன் : மாமா, எங்க அப்பா இன்று சீக்கிரம் ஆபீஸ் போகணுமாம்...!*

*பக்கத்து வீட்டுக்காரர் : அதனால் என்ன?*

*சிறுவன் : பேப்பரைச் சீக்கிரமா இரவல் வாங்கிட்டு வரச் சொன்னார்.*

*- வலங்கைமான் நூர்தீன்*

## எந்தத் திக்கிலும் 200 கி. மீ.!

*தொழிற்கல்வி நுழைத் தேர்வு எழுதுபவர்களில், அதிக சிரமத்துக்கு உள்ளாகிறவர்கள் தென்னாற்காடு மாவட்டத்தைச் சேர்ந்த மாணவ, மாணவியர்தாம். தேர்வு எழுதுவதற்கு, சென்னை, சேலம், திருச்சி என்று எந்தத் திக்கில் சென்றாலும் குறைந்த பட்சம் இருநூறு கி. மீ. பயணம் செய்துதான் ஆக வேண்டும். "எங்களுக்கு மட்டும் ஏனிந்த அசௌகரியம்?'' என்று கேட்கிறார் கடலூரைச் சேர்ந்த ராமநாதன். இந்தப் பிரச்னை குறித்து நாம் மாவட்ட ஆட்சித் தலைவரிடம் எடுத்துச் சொன்ன போது, அடுத்த ஆண்டிலாவது கடலூரையோ அல்லது விழுப்புரத்தையோ, தேர்வு மையங்களுள் ஒன்றாகச் சேர்ப்பதற்கு ஆவன செய்வதாகக் கூறினார்.*

**பம்பாய்க் கடிதம் :**

# ரயிலில் ஒரு மகளிர் ஸ்பெஷல்!

முழுக்க, முழுக்க மகளிருக்காகவே ஒரு புறநகர் ரயிலைத் துவக்கியிருக்கிறது பம்பாயின் மேற்கு ரயில்வே! மே 5 ஆம் தேதி முதல் ஓடும் இந்த ரயில், மாலை 6.04க்கு சர்ச்கேட் ஸ்டேஷனை விட்டுக் கிளம்பி, இரவு 7.12க்கு போரிவ்லி ஸ்டேஷனைச் சென்று அடையும். புதிதாகப் பொறுப்பேற்றிருக்கும் ஜெனரல் மானேஜர், பி. வி. வைத்தீஸ்வரன் முயற்சியால் துவக்கப்பட்ட இந்த இரயிலில், முதல் நாளன்றே என் போட்டால் என் விழாதபடி அப்படியொரு மகளிர் கூட்டம்! பிளாட்பாரத்தில் பரிதாபமாக அடுத்த இரயிலுக்காகக் காத்திருக்க விடப்பட்ட ஆண்கள், ''டாட்டா'' காட்டி, இந்தியாவின் முதல் பெண்கள் ஸ்பெஷலை வழியனுப்பி வைத்தனர். ''பம்பாயில் வேலைக்குச் செல்லும் பெண்களின் எண்ணிக்கை ஆயிரக் கணக்கில் அதிகரித்திருக்கிறது. இத்தகைய ஒரு வசதி எங்களுக்கு அவசியம் தேவைதான்'' என இதை உளமார வரவேற்றிருக்கின்றனர் மகளிர்!

## சர்வகலாசாலையில் கோஷ்டிப் பூசல்

அரசியல் கட்சிகளில் கோஷ்டிப் பூசல் இருப்பது போல் பம்பாய் சர்வ கலாசாலையிலும் உண்டு. இன்று இது ஒரு மோசமான நிலையை எட்டியுள்ளது.

இவ்வளவு ஆண்டுகளாகப் பல்கலைக் கழகத் துணை வேந்தராக இருந்த எம். பெங்காலி, பதவி ஓய்வு பெற, அவருக்கு எதிர் அணியில் இருந்த டாக்டர் எஸ். டி. கார்விக் துணைவேந்தராக்கப்பட்டிருக்கிறார். இவர் பதவி ஏற்றவுடன் ரெஜிஸ்டிரார் ஜி. எம். ராஜூர்கரைப் பதவிநீக்கம் செய்தார். இதை எதிர்த்து ராஜூர்கர் கோர்ட்டுக்குச் செல்லவிருக்கிறார். மாநகரிலுள்ள கல்லூரி முதல்வர்கள், பேராசிரியர்கள் இரு கட்சிகளாகப் பிரிந்து ஒருவருக்கொருவர் எதிராகச் செயல்படுவது பம்பாயின் துரதிர்ஷ்டம்!

## இந்தியன் ஏர்லைன்ஸும், பயணிகளும்

பைலட்கள், இஞ்சினீயர்கள்... அடுத்து இப்போது கண்ட்ரோலர்களின் ஸ்டிரைக்! மங்களூர் ஏர்போர்ட்டின் கண்ட்ரோலர்கள் கிளியரன்ஸ் கொடுக்க மறுத்ததால் பம்பாய் செல்லும் விமானம் வழக்கம் போல மதியம் மூன்று மணிக்குக் கிளம்ப முடியவில்லை. இதனால் இந்தியன் ஏர்லைன்ஸ், விமானம் மறுநாள் காலை கிளம்பும் என அறிவித்து, பயணிகளை ஓட்டலில் தங்கவைக்க மே 7 ஆம் தேதி மட்டும் ஒரு லட்சம் ரூபாய்க்கு மேல் செலவு செய்தது. பயணிகளுக்குச் சொல்ல முடியாத சங்கடங்கள், தொல்லைகள்! 'இந்த லட்சணத்தில் நாம் எப்படி டூரிஸ்டுகளைக் கவர்வது' என்று கேட்கின்றனர் சுற்றுலா ஏஜென்ஸிகளை நடத்துவோர்.

## எதிர்க்கட்சிகள் நடத்திய பந்த்

''வறட்சி நிலைமையைச் சமாளிக்க அரசு எதுவும் செய்யவில்லை'' என்ற காரணம் காட்டி எதிர்க்கட்சிகள் மே 8-ஆம் தேதி மகாராஷ்டிரத்தில் நடத்திய 'பந்த்' மக்களுக்கு மேலும் வறட்சியையே உண்டாக்கிற்று. வறட்சிப் பகுதிகளுக்கு நூற்றுக்கணக்கான லாரிகளில் தண்ணீர் சப்ளை செய்வதும் அன்று தடைப்பட்டது! தொழிற்சாலைகளின் ஒருநாள் கதவடைப்பால், மகாராஷ்டிரத்தில் 140 கோடி நஷ்டமாகும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது.

சிவசேனா முன்னின்று நடத்திய இந்த 'பந்த்'துக்கு, ரெவின்யூ அமைச்சர் திரு. சாகன் புஜ்பால் மீது இவர்கள் கொண்ட விரோதமே காரணம் என்கின்றனர். இவர் சிவசேனாவிலிருந்து விலகி, காங்கிரஸில் சேர்ந்து அமைச்சர் ஆனவர். 'பந்த் தோல்வியே' என்கிறது அரசு. 'இல்லை, இது எங்களுக்குப் பூரண வெற்றி' என்கிறது சிவசேனா. நாட்டின் பொருளாதார இழப்பைப் பற்றி யாரும் கவலைப்படுவதாகத் தெரியவில்லை!

– ராஜீவி நரசிம்மன்

# சிவகாமியின் சபதம்

## ஐந்தாம் அத்தியாயம்
## மாமல்லரின் பயம்

காஞ்சி அரண்மனையின் மேல் உப்பரிகையில் பளிங்குக் கல் மேடையில், விண்மீன் வைரங்கள் பதித்த வான விதானத்தின் கீழ், மாமல்லரும் மானவன்மனும் அமர்ந்திருந்தார்கள்.

இலட்சக்கணக்கான ஜனங்கள் வாழ்ந்த காஞ்சி மாநகரத்தில், அப்போது அசாதாரண நிசப்தம் குடிகொண்டிருந்தது.

மாமல்லர், அந்த நள்ளிரவில், காஞ்சி நகரின் காட்சியை ஒரு தடவை சுற்றி வளைத்துப் பார்த்து விட்டு, ஒரு பெருமூச்சு விட்டார்.

''இந்தப் பெருநகரம் இன்றைக்கு அமைதியாகத் தூங்குகிறது. நாளைக்கு இந் நேரம் ஏக அமர்க்களமாயிருக்கும். நகர மாந்தர் நகரை அலங்கரிக்கத் தொடங்குவார்கள். படை வீரர்கள் புறப்பட ஆயத்தமாவார்கள். ஆகா! நாளை இரவு இந்த நகரில் யாரும் தூங்கவே மாட்டார்கள்!'' என்றார் மாமல்லர்.

''பல்லவேந்திரா! அப்படியானால் குறித்த வேளையில் புறப்படுவதென்று முடிவாகத் தீர்மானித்து விட்டீர்களா? பாண்டியன் வந்து சேராவிட்டால் கூட?'' என்று மானவன்மன் கேட்டான்.

''விஜயதசமியன்று காலையில் ஒரு வேளை சூரியன் தன் பிரயாணத்தைத் தொடங்காமல் நின்றாலும் நான் நிற்க மாட்டேன். ருத்ராச்சாரியார் சொன்னதைக் கேட்கவில்லையா, இளவரசே!''

மானவன்மன் இலங்கை அரசனாக இன்னும் முடிசூட்டப்படவில்லையாதலால் 'இளவரசன்' என்றே அழைக்கப்பட்டு வந்தான்.

''ஆம்; ருத்ராச்சாரியார் கூறியதைக் கேட்டேன். பல்லவேந்திரா! அப்புறம் ஒரு முறை நான் தனியாகவும் ருத்ராச்சாரியாரிடம் சென்று ஜோசியம் கேட்டு விட்டு வந்தேன்.''

''ஓஹோ! அப்படியா! ஆச்சாரியார் என்ன சொன்னார்?''

''எல்லாம் நல்ல சமாசாரமாகத்தான் சொன்னார்.''

''அப்படியென்றால்?''

''இலங்கைச் சிம்மாசனம் எனக்கு நிச்சயம் கிடைக்குமென்றார். அதற்கு முன்னால் பல இடையூறுகள் நேரும் என்றும் பல போர் முனைகளில் நான் சண்டை செய்வேன் என்றும் சொன்னார்.''

மாமல்லர் புன்னகை புரிந்து, ''இவ்வளவுதானா? இன்னும் உண்டா?'' என்று கேட்டார்.

''தாங்கள் வாதாபியைக் கைப்பற்றி, வெற்றி வீரராகத் திரும்பி வருவீர்களென்றும், இந்தக் காரியத்தில் இரண்டு இராஜ குமாரர்கள் தங்களுக்கு உதவி புரிவார்கள் என்றும் கூறினார்.''

மாமல்லர் சிரித்துக் கொண்டே, ''அந்த இரண்டு இராஜகுமாரர்கள் யார்?'' என்று கேட்டார்.

அமரர் கல்கி

''இதே கேள்வியை நானும் ருத்ராச்சாரியாரைக் கேட்டேன். ஜோசியத்தில் அவ்வளவு விவரமாகச் சொல்ல முடியாது என்று கூறி விட்டார்'' என்றான் மானவன்மன்.

''என் அருமைத் தோழரே! அந்த விவரத்தை நான் சொல்கிறேன். எனக்கு வாதாபிப் போரில் உதவி செய்யப் போகிற அரச குலத்தினரில் நீர் ஒருவர். நீர் இந்தக் காஞ்சி நகரில் இருந்தபடியே எனக்கு உதவி செய்யப் போகிறீர்!...'' என்று மாமல்லர் சொல்வதற்குள், இலங்கை இளவரசன் குறுக்கிட்டு, ''பல்லவேந்திரா! என்னுடைய விண்ணப்பத்தைக் கேட்டருளுங்கள். குமார பாண்டியன் வந்து சேருவது தான் சந்தேகமாயிருக்கிறதே, அவனுடைய ஸ்தானத்தில் என்னை அழைத்துப் போகலாகாதா? தாங்கள் போர்க்களம் சென்ற பிறகு, காஞ்சி அரண்மனையில் என்னைச் சுகமாக உண்டு, உடுத்தி, உறங்கச் சொல்கிறீர்களா? இது என்ன நியாயம்!'' என்று கேட்டான்.

''என் அருமைத் தோழரே! நான் உம்மைப் போருக்கு அழைத்துப் போக மறுப்பதற்கு எல்லாவற்றிலும் முக்கியமான காரணம் ஒன்று இருக்கிறது; அதை இது வரையில் சொல்லவில்லை. நீர் பிடிவாதம் பிடிப்பதால் சொல்கிறேன். ஒருவேளை போர்க்களத்தில் உமது உயிருக்கு அபாயம் நேர்கிறதென்று வைத்துக் கொள்ளுங்கள். பின்னர், இலங்கை இராஜ்ய வம்சத்தின் கதி என்ன ஆவது? உமது இராஜ்யத்தை அநீதியாகவும் அக்கிரமமாகவும் அபகரித்துக் கொண்டிருக்கிறவனுக்கே அல்லவா இராஜ்யம் நிலைத்துப் போய் விடும்! மானவன்மரே! இராஜ குலத்தில் பிறந்தவர்கள் தங்களுடைய வம்சம் தடைப்பட்டுப் போகாமல் பார்த்துக் கொள்வதில் முதன்மையான சிரத்தை எடுத்துக் கொள்ள வேண்டும். பல்லவ வம்சத்தை விளங்க வைப்பதற்கு. எனக்கு ஒரு புதல்வன் இருக்கிறான்; உமக்கு இல்லை. ஆகையினால் தான் முக்கியமாக உம்மை வரக் கூடாதென்கிறேன்'' என்றார் மாமல்லர்.

இதைக் கேட்ட மானவன்மன் பொருள் பொதிந்த புன்னகை புரிந்த வண்ணம், ''பல்லவேந்திரா! இதைப் பற்றி என் மனைவி ஸுஜாதையிடம் இப்போதே சொல்லி, அவளோடு சண்டை பிடிக்கப் போகிறேன். இலங்கை இராஜ வம்சத்துக்கு அவள் இன்னும் ஒரு புதல்வனைத் தராத காரணத்தினால்தானே என் வாழ்நாளில் ஓர் அரிய சந்தர்ப்பம் கைநழுவிப் போகிறது? உலக சரித்திரத்தில் என்றென்றைக்கும் பிரசித்தி பெறப் போகிற வாதாபி யுத்தத்தில் நான் சேர்ந்து கொள்ள முடியாமலிருக்கிறது?'' என்று சொல்லிக் கொண்டே எழுந்தான்.

''நண்பரே! உட்காரும். உமது துணைவியோடு சண்டை பிடிப்பதற்கு இப்போது அவசரம் ஒன்றும் இல்லை. நான் வாதாபிக்குப் புறப்பட்டுப் போன பிறகு, சாவகாசமாகத் தினந்தோறும் சண்டை போட்டுக் கொண்டிருக்கலாம்'' என்றார் சக்கரவர்த்தி.

மேடையிலிருந்து எழுந்த மானவன்மன் மீண்டும் உட்கார்ந்து, ''பிரபு! நள்ளிரவு தாண்டி விட்டதே? நாளை இரவு தான் யாரும் தூங்குவதற்கில்லை. இன்றைக்காவது நாங்கள் சிறிது தூங்க வேண்டாமா?'' என்று கேட்டான்.

''என்னைத் தூங்கவா சொல்கிறீர்! எனக்கு ஏது தூக்கம்? நான் தூங்கி வருஷம் பன்னிரண்டு ஆகிறது!'' என்றார் மாமல்லர்.

''லக்ஷ்மணர் காட்டுக்குப் போன போது, அவருடைய பத்தினி ஊர்மிளை, அவருடைய தூக்கத்தையும் வாங்கிக் கொண்டு, இரவும் பகலும் பதினாலு வருஷம் தூங்கினாளாம். அம் மாதிரி தங்களுடைய தூக்கத்தையும் யாராவது வாங்கிக் கொண்டு தூங்குகிறார்களா, என்ன?'' என்று மானவன்மன் கேட்டான்.

''இளவரசே! என்னுடைய தூக்கத்தையும் ஒரு பெண்தான் கொண்டு போனாள். என்னைக் கேட்டு அவள் வாங்கிக் கொள்ளவில்லை. அவளே அபகரித்துக் கொண்டு போய் விட்டாள். ஆகா! அந்தச் சிற்பி மகள் இங்கே சமீபத்தில் அரண்ய வீட்டில் இருந்த போதும் எனக்குத் தூக்கம் இல்லாதபடி செய்தாள். இப்போது நூறு காத தூரத்துக்கப்பால் பகைவர்களின் நகரத்தில் இருக்கும் போதும் எனக்குத் தூக்கம் பிடிக்காமல் செய்கிறாள்...'' என்று மானவன்மனைப் பார்த்துச் சொல்லி வந்த மாமல்லர், திடீரென்று வானவெளியைப் பார்த்துப் பேசலானார் : ''சிவகாமி! ஏன் என்னை இப்படி வருத்துகிறாய்? உனக்கு நான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றுவதற்காகப் பகலெல்லாம் பாடுபடுகிறேனே. இரவிலே சற்று நேரம் என்னை நிம்மதியாகத் தூங்க விடக் கூடாதா? வாதாபியில் தனி வீட்டிலே இரவெல்லாம் நுந்தா விளக்கே துணையாக உட்கார்ந்து என்னைச் சபித்துக் கொண்டிருக்கிறாயா? தாங்காத களைப்பினால் தப்பித் தவறி நான் சற்றுத் தூங்கினால், கனவிலும் வந்து என்னை வதைக்கிறாயே? உன்னை நான் மறக்கவில்லை, சிவகாமி! உனக்கு நான் கொடுத்த வாக்குறுதியையும் மறந்து விடவில்லை. இத்தனை நாள் பொறுத்துக் கொண்டிருந்தவள் இன்னும் கொஞ்ச நாள் பொறுத்திரு!''

மாமல்லர் வெறிகொண்டவர் போல் வானவெளியைப் பார்த்துப் பேசியது, இலங்கை இளவரசனுக்குப் பயத்தை உண்டாக்கிற்று.



## அருள்வாக்கு

ஒருத்தன் தன் வேலை, வீட்டு வேலைகளை மற்றவர்களிடம் விட்டு விட்டுப் பொதுப் பணிக்குப் போகிறான் என்னும் பொழுது, அந்த மற்ற பேருக்கு இவனிடம் ஏற்படுகிற அதிருப்தியில் ஸோஷல் தொண்டே பிடிக்காமல் போய் விடுகிறது. ''போதும். இவனொருத்தன் ஊர்க்காரியம் என்று உழப்பறித்துக் கொண்டு அகத்துக் காரியத்தை விட்டிருப்பது. நமக்கு இந்த வேலையும் கீலையும் வேண்டவே வேண்டாம்'' என்று அவர்களுக்கு ஒதுங்கிப் போகத் தோன்றி விடும். அதுவே அவன், அளவறிந்து அகத்துக் காரியத்தையும் கவனித்துக் கொண்டு பொதுக் காரியமும் பண்ணினானென்றால் அப்போது வீட்டின் மற்ற மனுஷ்யர்களும் இவனோடு கூட வெளித் தொண்டுக்கு வந்து தங்களாலானதைச் செய்வார்கள். வீட்டுக் காரியத்தைக் கவனிப்பதால் இவனொருத்தன் செய்யும் சோஷல் ஸர்வீஸ் குறைந்து போகிறதென்றால், இப்போது அதைவிட ஜாஸ்தியாக மற்றவர்களின் ஸர்வீஸ் ஸொஸைட்டிக்குக் கிடைத்து விடும். இவன் அதியாகப் போய் வீட்டு மனுஷ்யர்களின் அதிருப்தியை ஸம்பாதித்துக் கொள்ளும் போதோ, தன் நோக்கத்துக்கே பாதகமாக, அவர்களால் ஏற்படக்கூடிய ஸோஷல் சர்வீஸைத் தடுத்து விடுகிறான்!

தொண்டுக்குப் போகிறவர்களுக்கு ஒரு 'ட்ரிக்' சொல்லித் தருகிறேன். அன்போடு, பதவிசாக நடப்பதுதான் 'ட்ரிக்'. வெளி மனுஷ்யர்களிடம் மட்டுமில்லை, அகத்துப் பேரிடமும் இப்படிப் பரிவாக, பணிவாக இருந்தானானால் அவர்களே, ''நாம்தான் வீட்டையே கட்டிக் கொண்டு அழுகிறோம். இவனாவது லோகத்துக்குப் பண்ணி, நமக்கும் சேர்த்துப் புண்யம் ஸம்பாதித்துத் தரட்டும்'' என்று நினைத்து அவனிடம் வீட்டு வேலைகளைக் கூடிய மட்டும் காட்டாமல் தாங்களே பண்ணுவார்கள்.

**– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

''பல்லவேந்திரா! இது என்ன? சற்று அமைதியாயிருங்கள்'' என்றான் மானவன்மன்.

''நண்பரே! என்னை அமைதியாயிருக்கவா சொல்கிறீர்! இந்த வாழ்நாளில் இனி எனக்கு எப்போதாவது மன அமைதி கிட்டுமா என்பதே சந்தேகந்தான். மானவன்மரே! பத்து வருஷத்துக்கு முன்பு நான் ஒரு தவறு செய்தேன். ஓர் அபலைப் பெண்ணின் ஆத்திரமான பேச்சைக் கேட்டு, அந்தக் கணத்தில் மதியிழந்து விட்டேன். நானும் சேனாதிபதியும் வாதாபியில் சிவகாமியைச் சந்தித்து அழைத்த போது, அவள் சபதம் செய்திருப்பதாகவும், ஆகையால் எங்களுடன் வர மாட்டேனென்றும் சொன்னாள். அப்போது சேனாதிபதி அவளுடைய பேச்சைக் கேட்கக் கூடாதென்றும் பலவந்தமாகக் கட்டித் தூக்கி வந்துவிட வேண்டும் என்றும் கூறினார். அதைக் கேளாமல் போய் விட்டேன். அந்தத் தவறை நினைத்து நினைத்துப் பத்து வருஷமாக வருந்திக் கொண்டிருக்கிறேன்.''

இவ்விதம் கூறி விட்டுச் சற்று மாமல்லர் மௌனமாகச் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். பிறகு கூறினார்: ''மானவன்மரே! வாதாபிக்குப் படையெடுத்துச் செல்லும் நாளை நான் எவ்வளவோ ஆவலுடன் எதிர்பார்த்திருந்தேன். அந்த நாளைத் துரிதப்படுத்துவதற்காக எவ்வளவோ தீவிரமான முயற்சிகள் எல்லாம் செய்தேன். ஆனால் கடைசியாகப் புறப்படும் நாள் நெருங்கியிருக்கும் போது பயமாயிருக்கிறது...!''

''என்ன? தங்களுக்கா பயம்?'' என்று மானவன்மன் அவநம்பிக்கையும் அதிசயமும் கலந்த குரலில் கூறினான்.

''ஆம்! எனக்குப் பயமாய்த்தானிருக்கிறது. ஆனால், போரையும் போர்க்களத்தையும் நினைத்து நான் பயப்படவில்லை! புலிகேசியைக் கொன்று, வாதாபியைப் பிடித்த பிறகு நடக்கப் போவதை எண்ணித் தான் பயப்படுகிறேன். பகைவரின் சிறையில் பத்து வருஷமாகச் சிவகாமி எனக்காகக் காத்திருக்கிறாள். அந்த நாளில் அவளுடைய குழந்தை உள்ளத்தில் தோன்றிய காதலை அன்று போல் இன்றும் தூய்மையாகப் பாதுகாத்து வந்திருக்கிறாள். ஆனால், என்னுடைய நிலைமை என்ன? கலியாணம் செய்து கொண்டு, இரண்டு குழந்தைகளுக்குத் தகப்பனாக இருக்கிறேன். சிவகாமியை எந்த முகத்தோடு நான் பார்ப்பது? அவளிடம் என்ன சொல்லுவது? இதை நினைக்கும் போதுதான் எனக்குப் பயமாயிருக்கிறது. அதைக் காட்டிலும் போர்க்களத்தில் செத்துப் போனாலும் பாதகமில்லை!''

''பல்லவேந்திரா! தாங்கள் போர்க்களத்தில் உயிரை விட்டால், தங்களை நம்பி இங்கு வந்து உட்கார்ந்திருக்கும் என்னுடைய கதி என்ன? இலங்கைச் சிம்மாசனத்தில் என்னை அமர்த்துவதாகத் தாங்கள் எனக்கு அளித்த வாக்குறுதிதான் என்ன ஆவது?...'' என்று நாத்தழுதழுக்கக் கேட்டான் மானவன்மன்.

(தொடரும்)

# போராடப் பிறந்த சொக்கலிங்க ஆசாரி



விலாசம்தான் புதுப்பாளையம் (கடலூர்) ராமதாஸ் நாயுடு தெருவே தவிர, பிரச்னைகள் எங்கு இருக்கின்றனவோ, அங்கே எல்லாம் இருக்கிறார் சொக்கலிங்க ஆசாரி.

பத்தடிக்குப் பத்தடி கூட இல்லாத, சற்றே உயரத்தில் இருக்கும் சின்னஞ்சிறு கடையில், பாத்திரங்கள் பழுது பார்க்கும் சாதனங்களை ஓர் ஓரமாக வைத்திருக்கிறார். அவற்றை விட அதிகமாக ஃபைல்கள்!

கம்பீரமான உருவம். பாரதி மீசை.

''மக்களுக்கு உதவறதாச் சொல்லிக்கிட்டு ரௌடித்தனம் பண்ணறதில்லே, குரூப் சேர்த்துக்கிட்டு, ரகளை பண்ணறதும் கிடையாது; பொது மக்களுக்கு உதவ என்ன செய்யணுமோ, எப்படி நடந்துக்கணுமோ அதைத்தான் செஞ்சுக்கிட்டிருக்கேன்!'' என்று சொல்லும் சொக்கலிங்க ஆசாரியை, கடலூர் வாசிகள் நேசிக்கிறார்கள். காரணம், பொது மக்களுக்கு எது தேவை என்று அறிந்து அந்தப் பிரச்னைகளுக்காகப் போராடுகிறார்.

மிகப் பெரிய தொல்லையான ரெயில்வே கேட்டுக்கு 'மரண வாயில்' என்று பெயர் சூட்டும் விழா ஒன்றை ஞாயிற்றுக் கிழமை மாலை சரியான ராகு காலத்தில் நடத்தி வைத்தார் சொக்கலிங்க ஆசாரி.

''ஆமா. ஜூன் லே மூணு நாள் நடந்த அ. தி. மு. க. மாநாட்டுல, ரெயில்வே மேம்பாலம் கட்டறதாத் தீர்மானம் போட்டாங்க. ஆனா கட்டலே. அப்போதிலிருந்து போராடறோம். மத்திய அரசாங்கத்துக்கிட்டே இருந்து எனக்கு 83-ம் வருஷம் ஒரு லெட்டர் வந்தது. மாநில அரசுதான் இத்தத் திட்டத்தை நடத்தணும்னு எழுதியிருந்தாங்க. மேம்பாலம் கட்டறதைப் பத்தி, தமிழ்நாடு அரசு எந்த ப்ரபோசலும் அனுப்பி வைக்கலேன்னும் அந்த லெட்டர்லே எழுதி யிருந்தாங்க. இது கடலூர் மக்களுக்குப் பெரிய பிரச்னைங்க!'' என்கிறார்.

லாரன்ஸ் சாலையில் போக்குவரத்தை முறைப்படுத்தாத தன் காரணமாக, கணபதி சுப்பிரமணியன் என்ற பள்ளிச் சிறுவனை பஸ் மோதிச் சாகடித்ததும், தனிப்பட்ட முறையில் லாரன்ஸ் ரோட்டை இரண்டாகப் பிரித்து, போக்குவரத்தை ஒழுங்கு பண்ண உதவியிருக்கிறார் சொக்கலிங்க ஆசாரி.

சாலையின் ஓர் இடத்தில் ஸ்பீட் பிரேக்கர் தேவையாய் இருந்தது. ஓர் அறிவிப்பை அங்கே நட்டு வைத்தார். கடப்பாறையால் அந்த இடத்தில் சாலையை வெட்டி, ஸ்பீட் பிரேக்கர் போடப் போவதாக அறிவித்தார். அவர் குறிப்பிட்டிருந்த நாளுக்கு ஒருநாள் முன்னதாகவே போலீஸ் அதிகாரி அதை ஒருவழிப் பாதையாக ஆக்கி விட்டார்! ''எந்த அதிகாரியும் எனக்கு எதிர்ப்பே கிடையாதுங்க!'' என்கிறார் ஆசாரி.

''மொட்டை பெட்டிஷன் போடுகிற வேலையே நம்மிடம் கிடையாது'' என்று சொல்லும் ஆசாரி, ''எனக்குன்னு எதிர்த்துப் போராடறதில்லே நான். எங்களுக்குன்னு தான் போராடறேன்!'' என்கிறார் கம்பீர மாக.

சாலையின் குறுக்கே பல மாதங்களாகச் சாக்கடை ஓடிக் கொண்டிருந்ததற்கு, அதைச் சரிப்படுத்தக் கோரி ஒரு போராட்டம்.

''இதுக்கெல்லாம் உங்களுக்கு எப்படி நேரம் கிடைக்கிறது? தொழிலைக் கவனிக்க வில்லையானால் சாப்பாட்டுக்கு என்ன செய்வீர்கள்?''

''அட, மூணு வேளை சாப்பிடறதுக்குப் பதிலா ரெண்டு வேளை சாப்பிடறது! அதனால என்னங்க? மக்களுக்கு என்னைத் தெரிகிறதே, அது போதாதா?'' என்கிறார்.

– எஸ். வி. என்.



தாத்தாவும் பேரனும்...

நாடு விட்டு நாடு வந்து, அகதிகளாகத் தஞ்சம் புகுந்தவர்கள் பற்றி, நம்மில் பலருக்கு அத்தனை நல்ல அபிப்ராயம் இருக்க முடியாது. அவர்களால் தஞ்சம் புகுந்த நாட்டுக்குச் செலவும் சச்சரவும் கூடுவதைத்தான் பார்த்திருக்கிறோம்.

இதற்கு விதிவிலக்கு உண்டு என்றால், கர்நாடக மாநிலத்தில் உள்ள திபேத்திய அகதிகள் முகாமாகத்தான் இருக்க முடியும். மைசூரைத் தாண்டி, குஷால்நகருக்கு அருகே, பைல் குப்பத்தில் குடியேற்றப்பட்டுள்ள திபேத்திய அகதிகள் நொடிக்கொரு முறை ஸ்கூட்டரிலும், மோட்டார் சைக்கிளிலும் சாலைகளில் கம்பீரமாகப் பறக்கிறார்கள். அகதிகளின் செழுமை, நம்மை அசத்தும்; இவர்களின் உழைப்போ பிரமிக்கச் செய்யும்.

சீன ஆக்ரமிப்புக்கு திபேத் உட்பட்ட பிறகு, ஏராளமான திபேத்தியர்கள் தங்கள் தாய்நாட்டை விட்டு வெளியேறி, இந்தியாவில் தஞ்சம் புகுந்த சமயத்தில் தலாய் லாமா இந்திய அரசை அணுகினார். நேருஜிக்கு மனசு இரங்கியது. அன்றைய கர்நாடக முதல்வராயிருந்த நிஜலிங்கப்பாவைக் கேட்டுக் கொண்டார், உதவி செய்யும்படி. நிஜலிங்கப்பா மூவாயிரம் அகதிகளை ஏற்றுக் கொண்டார். ஆளுக்கு ஓர் ஏக்கர் நிலம் ஒதுக்கினார். அதைப் பயிரிட்டுப் பயன்படுத்திக் கொள்ள மட்டுமே அவர்களுக்கு உரிமை. நிலம் சொந்தமில்லை.

இது தவிர, 500 ஏக்கரில் சாலைகள் போட்டு, பள்ளிக்கூடம், மருத்துவமனை,

# கர்நாடகாவில் ஒரு குட்டி திபெத்

இளம் பிட்சுக்கள்

பெண்கள் தையல் பயிற்சிப் பள்ளி எல்லாம் கட்டிக் கொள்ளவும் நிலம் கொடுத்தார் நிஜலிங்கப்பா. நிலம் வறண்டது மட்டு மல்ல, சுத்தமாய்க் காடுதான். ஆனாலும் இவர்கள் சளைக்கவில்லை. எல்லாம் வெட்டி எடுத்து, நிலத்தைச் சீர்படுத்திப் பயிர் செய்யத் தொடங்கினார்கள். மக்காச் சோளம்தான் முக்கிய பயிர். ஆறு கிராமங்கள் இப்படி இவர்கள் உழைப்பில் உருவான பின், கூட்டுறவுச் சங்கமும் உரு வானது. விதைகள், உரம் எல்லாம் கூட்டு றவுச் சங்கத்தின் மூலம் கிடைத்தது. முன் னேற்றம் இவர்களைத் தேடி வர ஆரம்பித் தது. உள்ளூர்வாசிகளுக்கும் இவர்கள் வேலை தர ஆரம்பித்தார்கள்! இன்றைக்கு இரண்டு சக்கர வாகனங்கள் தவிர, பலரிடம் மாருதியும், டிராக்டர்களும் கூட இருக்கின் றன! இப்போது 8000 பேர் இருக்கின் றனர்.

''இங்கே உள்ள திபேத்தியர்கள் கடும் உழைப்பாளிகள் - எங்களை விட!'' என்று சொல்லுகிறார்கள் உள்ளூர்வாசிகள். இவர் களுக்கிடையே சகஜ உறவும், பரஸ்பர மரியாதையும் இருக்கிறது. ''நாங்கள் உடுக்கச் சரியான உடை கூட இல்லாத நிலையில் இங்கே வந்தோம்; இப்போது நல்ல உடை உடுத்தி, மோட்டார் சைக்கி ளிலும், ஸ்கூட்டரிலும் பறக்கிற போது, உள்ளூர்வாசிகளுக்கு ஏதும் பொறாமை இல்லை'' என்கிறார்கள் இந்தத் திபேத்தி யர்கள். ஆனால் சொந்தத்தில் நிலம் வைத் திருக்கும் பண்ணையார்களுக்கு மட்டும் இவர்கள் மீது சற்றுக் கோபம்தான். கார ணம், திபேத்தியர்கள் கூலி கொடுக்கும் விஷயத்தில் கொஞ்சம் தாராள்மாகவே இருப்பதுதான்!

''கர்நாடகத்தில் மட்டும் மொத்தம் ஐந்து அகதிகள் முகாம்கள் இருக்கின்றன. இவற்றில் இப்போது 31,000 திபேத்தி யர்கள் வசிக்கின்றனர்!'' என்கிறார் நாடு கடத்தப்பட்ட அரசின் தலைவராக இயங் கும் மத குருவான தலாய் லாமாவின் பிரதி நிதி, சாங்போ.

இவர்களது பள்ளியிலேயே படித்து வெளியேறும் பல திபேத்தியர், தாங்க ளாகவே சிறு தொழில் துறையில் இறங்கி விடுகிறார்கள். சிலர் டாடா போன்ற நிறுவனங்களில் வேலைக்குச் சேர்ந்தும் விடுகிறார்கள். மஞ்சளும், அரக்குச் சிவப்பு மான அங்கிகள் அணிந்த 'குட்டி' லாமாக் கள் ஐம்பது பேர் இங்கே உள்ள குரு குலத்தில் (மானாஸ்டரி) புத்த மதத்திலும், பிற மதக்கோட்பாடுகளிலும் பயிற்சி பெறு கிறார்கள். (இவர்கள் குருகுலத்துக்கு 'கொம்ப்பா' என்று பெயர்.) காலை ஐந்து மணிக்கு வகுப்புக்கள் ஆரம்பித்தால், மாலை வரை தொடர்ந்து நடக்கின்றன. ஆங்கிலம், திபேத்திய மொழி ஆகிய வற்றை மத போதனையுடன் சேர்த்தே கற் கிறார்கள். குருகுலத்தில் உணவு, உடை, கல்வி எல்லாம் இலவசம்.

திபேத்தியப் புத்தாண்டு பிப்ரவரி அல்லது மார்ச்சில் வரும் பொழுது அதை



☛ பெண்கள்...

மிகுந்த கோலாகலத்துடன் கொண்டாடு கிறார்கள். இவர்களுக்கு அது ஒன்றுதான் குறிப்பிடத்தக்க திருவிழா.

பெரும்பாலும் 'ச்சூபா' என்ற பாரம் பரிய திபேத்திய உடை உடுக்கும் பெண் களில், இளம் வயதினர் மட்டும் நவீன உடைகளில் நாட்டம் செலுத்துகின்றனர். இவர்கள் கன்னடம் பேசவும் கற்றுக் கொண்டிருக்கின்றனர். ''உள்ளூர்வாசி களைத் திருமணம் செய்து கொள்ளவும் தடை எதுவும் இல்லை!'' என்கிறார் சாங்போ.

இவர்கள் தயாரிக்கும் தரை விரிப்புகளையும் கம்பளங்களையும் பார்த்தால், அழகிலும், தரத்திலும் இவர்கள் காண்பிக்கும் அக்கறை பிரமிப்பை ஏற்படுத்துகிறது. ''இந்தியா முழுதும் எங்களுக்கு மார்க்கெட் இருக்கிறது'' என்கிறார் விற்பனை அலுவலக மேலாளர் சோட்ரக்.

கிராமக் கைத்தொழில் பயிற்சித் திட்டத்தில், இந்த அகதிகள் உள்ளூர்வாசிகளுக்குப் பயிற்சி அளிப்பது சுவாரசியமான அம்சம்! கம்பள நெசவில் இரு நாடுகளின் பெண்களும் இணைந்தே ஈடுபட்டிருக்கிறார்கள்.

முப்பத்திரண்டு வித்தியாசமான கலவைப் பொருட்களைக் கொண்டு தயாரிக்கப்படும் திபேத்திய ஊதுபத்தியில், பலவித வேர்கள், மூலிகைகள், பசைகள் சேர்க்கப்படுவதால் ஒரு விநோதமான வாசனை தருகிறது. காலையில் எழுந்தவுடன் முகம் கழுவி, கடவுள் முன் வைக்கும் ஏழு கிண்ணங்களில் நீர் நிரப்பி, இந்த ஊதுவத்தியைக் கொளுத்தி வைத்து, மனம் புனிதமடையப் பிரார்த்தனை செய்வார்களாம். ''இந்த ஊதுவத்திகள் முழுக்க முழுக்க எங்கள் தேவைக்கே சரியாகப் போய் விடுகிறது. மீதியை பம்பாய்க்கு அனுப்புகிறோம்'' என்றார் சோட்ரக்.

இவர்களது மிகப் பெரிய மருத்துவ மனையில் திபேத்தியர் மட்டுமின்றி, உள்ளூர்வாசிகளும் சிகிச்சை பெறுகின்றனர்.

முகாம்களின் பல பகுதிகளைக் காண்பிக்க நம்முடன் வந்த இளைஞர் டென்சி நியுமாவின் பனியனில் 'ஸேவ் திபெத்' வாசகம் பளிச்சிட்டது. ''மனித உரிமைகள் மிதிபட்டு நசுக்கப்படும் திபேத்தில் பெரும்பான்மையினர் இப்போது சீனர்கள். எங்கள் நாட்டில் எங்களுக்கே இருக்க இடமில்லை. ஆனால் எங்கள் திபேத் ஒருநாள் சுதந்தரம் பெறும். அன்று எங்கள் தாய்நாட்டை நாங்கள் சென்று பார்த்து மகிழ்வோம்!'' என்கிறார் நியுமா உணர்ச்சி பொங்க.

இவரைப் போலவே, நாம் சந்தித்த அத்தனை பேரும் சொல்லுகிறார்கள். அதில் வெறுப்போ ஆத்திரமோ துளியும் தெரிய வில்லை. அமைதியான எதிர்பார்ப்பு மட்டுமே பளிச்சிடுகிறது!

– சாருகேசி

அட்டை வண்ணப்படமும்
வண்ணப்படங்களும் : யோகா

# சுப்ரஜா என்ன

எஸ். லக்ஷ்மிகாந்தன்

சுப்ரஜா. பெயரிலேயே ஓர் இனிப்புக் கலந்த சுகம் இருந்தது. போட்டோவில் வடித்து எடுத்த சிலைமாதிரி அழகு. மோனாலிசாவுடன் போட்டியிடும் புன்னகை. அளவான உயரம். தெய்வீகம் கமழும் முகம்.

பிரசாத்திற்குப் பிடித்திருந்தது. இருபத்தொன்பது வயதில் அரசாங்க உத்தியோகத்தில் இருக்கும் அவனுக்கு, இன்சூரன்ஸ் கம்பெனி சுப்ரஜா பொருத்தமாய்த் தெரிந்தாள். ஜாதகம் எல்லாம் பார்த்தபின், நல்ல நாளான இன்று பெண் பார்க்கத் தன் வீட்டுப் பெரியவர்களுடன் ஃபேர்லேண்ட்ஸில் இருக்கும் அவர்கள் வீட்டிற்குள் நுழைந்தான் பிரசாத்.

"வாங்கோ. வாங்கோ...."

பவ்யமான வரவேற்பு. ஹாலில் உட்கார்ந்தார்கள். ஆரம்ப அறிமுகங்கள் நடந்தன.

பிரசாத் தவிப்பாய் இருந்தான். எங்கே என் பொன்கவிதை? கண்களை முடிந்த வரை அலையவிட்டான். இன்னும் வெளியே வராத அழகு நிலவு எப்போது வரும்?

"எங்காத்துப் பொண்ணு வேலைக்குப் போறவன்னாலும் ஆத்துக்காரியம் அத்தனையும் அத்துபடி... எட்டுருக்குச் சமைப்பா... வீணை வாசிச்சான்னா சரஸ்வதியே வாசிக்கற மாதிரி தோணும்" என்றாள் சுப்ரஜாவின் அம்மா.

"எங்க பிள்ளையும் அதுக்கேத்த படிதான். சங்கீதம்னா உசுரு. அப்பப்போ பத்திரிகைகளுக்கெல்லாம் கூட எழுதுவான். அப்புறம் இவனை மாதிரி எந்தவிதமான கெட்ட பழக்கங்களும் இல்லாம இருக்கற பிரம்மச்சாரிகள் ரொம்பக் குறைச்சல்....." என்றாள் பிரசாத்தின் அம்மா.

"ஆஹா இந்த மாதிரி மாப்பிள்ளை கிடைக்கறது எங்க அதிர்ஷ்டம்தான்" என்றார் சுப்ரஜாவின் அப்பா வேணுகோபாலன்.

"ப்ராப்தம்னு ஒன்னு இருக்கே. அது அமைஞ்சாத்தானே நடக்கமுடியும் எதுவும்." பிரசாத்தின் அம்மா ஜெயலக்ஷ்மி நிதானமாய்ச் சொன்னாள்.

வேணுகோபாலன் சற்றே அசட்டுத்தனம் கலந்து சிரித்து வைத்தார். அவர் மனத்திற்குள் ஜெயலக்ஷ்மி சரியான ஆள் என்று நினைத்துக் கொண்டார்.

"பொண்ணை வரச் சொல்லலாமே".

உள்ளேயிருந்து டிபன் தட்டுடன் மெல்ல சுப்ரஜா வந்தாள். பிங்க் கலரில் சேலை அணிந்திருந்தாள், மேட்சிங்காய் பிளவுஸ். தலையைச் சற்றே உயர்த்தி, பிரசாத்தை அவள் பார்த்த முதல் பார்வையிலேயே பிரசாத் அம்பேல் ஆகிவிட்டான்.

பிரசாத் தனக்குள் முடிவு செய்துவிட்டான். 'சுப்ரஜாதான் என் மனைவி.'

பெண் பார்க்கும் படலம் முடிந்தது. ப்ரசாத் தன் சம்மதத்தை ரகசியமாய் அம்மாவிடம் தெரிவித்துவிட்டான். நாளைக்குக் காலையிலேயே கூட முகூர்த்தம் வைத்துக் கொள்ளத் தயாராக இருந்தான்.

"அப்போ மேற்கொண்டு...."

பேச்சு வார்த்தகளைப் பெரியவர்கள் ஆரம்பித்துக் கொண்டார்கள். அப்போதுதான் விவகாரம் கிளம்பிற்று. பிரசாத்தின் கனவு நிழல் கலைய ஆரம்பித்தது.

"என்ன இருந்தாலும் இத்தனை அதிகமா நீங்க கேட்கறது நியாயமாப் படலை. எங்க குடும்பச் சூழலையும் யோசிச்சுப் பாருங்கோ. இன்னைய விலையில் முப்பது பவுன்னு போனாலே லகரத்தைத் தாண்டறது. கொஞ்சம் இறங்கி வாங்களேன்."

"நாங்களும் பையனை நெறையச் செலவு பண்ணிப் படிக்க வைச்சு, நிறையப் பணம் கொடுத்துத்தான் வேலை



# சொன்னாள்?

வாங்கினோம். எங்களுக்கும் ஒரு பொண்ணு இருக்கா... இருந்தாலும் உங்களை மாதிரி நல்ல சம்பந்தம் கிடைக்கறதுக்காக முப்பது பவுன், இருபத்தைந்தாயிரத்திற்குப் பேசி முடிச்சுடலாம்... தவிர பாத்திர லிஸ்ட் தனி.''

''அதுக்கே கூட எங்களாலே செய்ய முடியுமாங்கறதைப் பார்க்கணும்.... பொண்ணு வேலைக்குப் போக ஆரம்பிச்சதும் தான் சேர்க்க ஆரம்பிச்சது.''

''இதைவிடக் குறைச்சலா ஒத்துக்கவே முடியாது. அந்த பாண்டிச்சேரியில் பார்த்த பொண்ணு வீட்டில் நாற்பது பவுன் போடறேன்னு சொன்னா. இவ்வளவு தூரம் குறைக்க இருக்கோம்.''

''எங்களால இருபத்தைந்து பவுன் போட முடியும். மீதம் ஐந்தைக் கொஞ்சம் டயம் கொடுத்தேன்னா தீபாவளிக்குச் செய்துடலாம்.''

''ஒத்துக்கவே முடியாது! கல்யாணம்னு ஆயாச்சுன்னா இப்போதைய பேச்சு எல்லாம் காத்துல பறந்துடும். அதனால் நாங்க கேட்ட அளவுக்குச் செய்யலைன்னா.. நீங்க வேறே இடம் பார்த்துக்கோங்கோ....''

பிரசாத் வேறு இடம் பார்க்கத் தயாராக இல்லை. சுப்ரஜாதான் எனக்கு வேண்டும். அவள்தான் எனக்கு மனைவியாய் வரவேண்டும்.

பிரசாத் தீர்மானித்தான்.

சுப்ரஜாவின் அலுவலக முகவரியை எடுத்துக் கொண்டான். தகிக்கும் வெயிலில் புறப்பட்டு, அ வ ன் அலுவலகத்தில் நுழைந்து, சுப்ரஜாவின் இடத்திற்குப் போனான்.

''ஹலோ. வாங்க....'' சுப்ரஜா வரவேற்றாள். டீ வரவழைத்து உபசரித்தாள்.

''சொல்லுங்க, என்ன விஷயம்.''

கொஞ்சம் தயக்கத்திற்கு பின் பிரசாத் தொடர்ந்தான்.

''நம்ம கல்யாண விஷயம் பற்றித்தான் பேச வந்தேன். ஐந்து பவுனுக்காக நான் உங்களை இழக்க விரும்பவில்லை. நீங்க தப்பா எடுத்துக்கலைன்னா நான் ஒரு வழி சொல்றேன். ஒரு சின்ன அட்ஜஸ்ட்மெண்ட்... வந்து.... பவுனை நானே வாங்

கொடுத்திடறேன்... நீங்க தப்பா எடுத்துக்கலைன்னா....''

''அதாவது நீங்க உங்க வீட்டுக்குத் தெரியாமல் கொடுக்கறதை நாங்களே போடறதாச் சொல்லணும். அப்படித்தானே?''

''ஆமாம். உங்க மனசுக்குக் கஷ்டமா இருந்ததுன்னா முடிஞ்சபோது திருப்பிக் கொடுத்துடுங்கோ... இந்தப் பிரச்னையால் கல்யாணத்தைத் தடை செய்யறது எனக்குச் சரியாப்படலை. இதிலே ஏதும் தப்பில்லை...'' நிதானமாகச் சொன்னான் பிரசாத்.

சுப்ரஜா யோசித்தாள். பிரசாத் பக்கம் மெல்லத் திரும்பினாள்.

''மிஸ்டர் பிரசாத்! என்னால உங்களைத் திருமணம் செய்து கொள்ள முடியாது.''

''என்ன சுப்ரஜா? ஏன் இப்படிச் சொல்றீங்க. உங்களுக்குக் கடன் மாதிரி தர்றதா நினைச்சுண்டு....''

சுப்ரஜா இடைமறித்தாள்.

''அதில்லை மிஸ்டர் பிரசாத். உங்களுடைய இந்த அட்ஜெஸ்மெண்ட் பாலிசி எனக்கு பயத்தைத் தர்றது. முன்னே பின்னே தெரியாத என்னிடம் இந்த மாதிரி செய்யச் சொல்றதுக்குப் பதிலா, உங்க பேரண்ட்ஸ் கிட்டே தைரியமாப் பேசியிருக்கலாம். எதிர்த்தும் இருக்கலாம். அங்கே உங்களை நீங்க அடகு வைச்சுட்டு, உங்க சுய தேவைக்காக என்கிட்டே வந்து கெஞ்சறது கோழைத்தனமாகப்படுகிறது. நாளைக்குக் கல்யாணத்திற்கு அப்புறமும் ஒவ்வொரு விஷயத்திற்கும் இதே மாதிரி செய்யச் சொன்னால் என்ன செய்யறது என்கிற சந்தேகம் எனக்கு வருகிறது. உங்களை வளர்த்த பெற்றோர்களையே சமாதானப்படுத்த முடியாத நீங்கள், என்னிடம் வந்து கேட்டது எனக்கு பிடிக்கலை. இது உங்களோட தன்னம்பிக்கையின்மையை - கோழைத்தனத்தைக் காட்டுகிறது. இந்த மாதிரியான சூழ்நிலையில் என் வாழ்க்கைப் பிணைப்பை உங்களோடு ஏற்படுத்திக் கொள்ள நான் தயாராக இல்லை.''

சுப்ரஜா பேசப் பேச பிரசாத் குன்றிப் போய் நின்றிருந்தான். சுப்ரஜா சொல்வதிலும் நியாயம் இருக்கத்தான் செய்கிறது என்பதையுணர்ந்து மௌனமாய் வெளியே வந்தான்.

## கடலூரில் வளரும் கர்நாடக இசை!

ஆண்டுதோறும் தியாகராஜருடைய ஜெயந்தியைக் கடலூரில் கோலாகலமாய்க் கொண்டாடி வருகிறார்கள். ஜலதரங்கக் கலைஞர் ஆனையாம்பட்டி கணேசனும், ரிடையர்டு போஸ்ட் மாஸ்டரான வரதராஜுலுவும் இந்த ஜெயந்தி விழாவின் சூத்திரதாரிகள். ஸ்பெஷாலிடி என்ன தெரியுமா? முழுக்க முழுக்க கடலூரைச் சேர்ந்த கலைஞர்கள்தாம் இதில் பங்கேற்கிறார்கள். வழக்கமாய் மூன்று நாட்கள் மட்டுமே நடைபெறும் இவ்விழா, இந்த வருடம் நான்கு நாள் விழாவாக வளர்ந்திருக்கிறது. முதல் வருடம் இந்த விழாவில் பங்கேற்ற கலைஞர்கள் இருபதே பேர்தாம். கடந்த எட்டு ஆண்டுகளில் அந்த எண்ணிக்கை நான்கு மடங்காகி விட்டது. விழா நடைபெறும் அருள்மிகு ராஜகோபால சுவாமி கோவில், திரண்டு வரும் கூட்டத்தால் நிறைந்து வழிகிறது. கர்நாடக சங்கீதத்துக்கு மவுசு குறைந்து விட்டது என்று யார் சொன்னது!

## கடலூர்க் 'காகிதம்'

''காகிதம்'' என்ற பெயரில் கடலூரில் ஒரு மாதப் பத்திரிகை வெளிவருகிறது. ''விளையாட்டுப் போல ஆரம்பித்தோம். எட்டு ஆண்டுகள் ஓடி விட்டன. இப்போது கடலூரில் மட்டுமின்றித் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலும் காகிதத்துக்கு வாசகர்கள் இருக்கிறார்கள்!'' என்றார் காகிதத்தின் செய்தி ஆசிரியர் கடல் நாகராசன். பிரமுகர்களின் பேட்டிகள் தவிர வாரப் பத்திரிகைகள் பலவற்றின் வழக்கமான அம்சங்களைக் காகிதத்தில் காண முடிகிறது. காகிதத்தை அச்சிடுபவரான மோகனகிருஷ்ணன், ''லாப நஷ்டக் கணக்கு ரொம்பப் பார்ப்பதில்லை; நல்ல பணியாற்றும் போது கிடைக்கும் திருப்தி அதையெல்லாம் ஈடுகட்டி விடுகிறது'' என்கிறார்.

■ கடல் நாகராஜன்



# திடீர் திடீர் என்று தீப்பிடிக்கும் மார்க்கெட்

நான்கு வருடங்களாகக் கடலூர் பான்பரி மார்க்கெட் பிரச்னை புகைந்து கொண்டிருக்கிறது. சும்மா புகையவில்லை. தீப்பிடித்துப் புகைந்து கொண்டிருக்கிறது.

''பான்பரி மார்க்கெட்டில், ஒரு பகுதியை முனிசிபாலிடி நேரிடையாக வாடகைக்கு விட்டிருக்கிறது. இன்னொரு பகுதியை மொத்தமாக ஏலத்துக்கு விட்டு விடுகிறது. அப்படி ஏலத்துக்கு எடுக்கும் காண்ட்ராக்டர்கள், ஏகத்துக்கு வாடகை கேட்கிறார்கள். அதில்தான் பிரச்னை ஆரம்பித்தது!'' என்கிறார் நடராஜன். இவர் கடலூரிலுள்ள சிறு வியாபாரிகள் சங்கச் செயலாளர்.

''முனிசிபாலிடி நேரிடையாக வாடகை வசூல் பண்ணும் கடைகளுக்கு ஒரு நாள் வாடகை மூன்றரை ரூபாய்தான். ஹைகோர்ட் ஆர்டர்படி மூன்றரை ரூபாய்தான் வசூலிக்கணும். ஆனால் காண்ட்ராக்ட் எடுத்தவர்கள் ஐந்து ரூபாயிலிருந்து 54 ரூபாய் வரை வாடகை கேட்கிறார்கள். அதுவும் கூட தரை (மண்) வாடகை மட்டும்தான். இங்கே இன்னும் தண்ணீர் வசதியோ, மின்சார வசதியோ கிடையாது. பாத்ரூம்-லெட்ரின் கிடையாது. சைக்கிள் ஸ்டாண்ட் கிடையாது!'' என்கிறார் இருபது வருடங்களாகக் கடை வைத்திருக்கும் நடராஜன்.



இவற்றையெல்லாம் எதிர்த்து நடராஜன் கோர்ட்டுக்குப் போன பிறகு, அவரைப் பலவிதங்களில் மடக்கப் பார்த்தார்களாம். 'உனக்கு ஒரு கடையே தருகிறோம். வாபஸ் வாங்கி விடு!' என்று ஆசை காட்டினார்களாம். எதற்கும் மசியவில்லை நடராஜன்.

''ஒருமுறை அல்ல, இருமுறை அல்ல - நாலு முறை எனது கடைக்குத் தீ வைத்து மிரட்டினார்கள். கடைசியாகத் தீப் பிடித்தது 25.1.92 அன்று! (இந்தக் கடைகளுக்கு எல்லாம் ஆஸ்பெஸ்டாஸ் கூரை போட்டு உதவியிருக்கிறது வர்த்தகர் சங்கம்.) அதற்காக ஒரு நாள் உண்ணாவிரதம் இருந்தோம். தாசில்தார் கூப்பிட்டுப் பேசினார், உண்ணாவிரதத்தை முடிக்கச் சொல்லி. நேற்று கமிஷனரைப் பார்த்துப் பேசினோம். சாதகமான பதில் எதுவும் இதுவரை கிடைக்கவில்லை!'' என்கிறார் நடராஜன்.

நடராஜன் பீடி, சிகரெட், பிஸ்கெட் கடை வைத்திருக்கிறார். உள்ளே அத்தனையும் எரிந்து சாம்பலான புகைப்படங்களை நம்மிடம் காண்பித்தார். ''எப்போதும் தட்சிணாமூர்த்தி, பழனிச்சாமி என்று இந்த இரண்டே பேர்தான் காண்ட்ராக்ட் எடுக்கிறார்கள். அது ஏன்?'' என்று கேட்கிறார் நடராஜன்.

- நாதன்

# வர்தினி மாமியின் வடாம் வகுப்பு

"சம்மர் கிளாசஸ் ஃபார் வடாம் அண்ட் வத்தல் மேக்கிங்" என்று, ஒரு பழைய வெள்ளைப் பாண்டின் கால்களைப் பிரித்து, அலங்கோலமாக எழுதப்பட்டிருந்த பேனர், மாருதி அபார்ட்மெண்டின் ஐந்தாவது மாடியில் ஊசலாடிக் கொண்டிருந்தது. உள்ளே தன் குட்டை உடம்பை, பட்டை சரிகை போட்ட பட்டுப் புடைவையில் சுற்றிக் கொண்டு, தலையில் கொண்டை, டென்ஷனில் சுருக்கவரிகள் விழுந்த முன்மண்டை சகிதம், ஒரு பிரின்சிபால் 'கெட்அப்' பில் வர்ஷினிமாமி உலாத்திக் கொண்டிருந்தாள். இன்னும் அரைமணி நேரத்தில் வகுப்பை ஆரம்பிக்க வேண்டுமே என்ற பயத்தில் குப்குப்பென்று மாமியின் 'ஓ' பாசிடிவ் வகை இரத்தம் அடித்துக் கொண்டிருக்க, அவள் சாபத்திற்கு ஆளான வெங்கட்ராமன் நிம்மதியாக உள் அறையுள் பேப்பரைப் படித்துக் கொண்டிருந்தார்.

'இப்படி மனுஷன் தன்னை மாட்டி விட்டுவிட்டாரே' என்று மனம் ஒருபுறம் பொருமிக் கொண்டிருக்க, மறுபுறம் அவர் அரைகுறை ஆங்கிலத்தில் எழுதிக் கொடுத்திருந்த முகவுரையை மாவிடரில் ஓட விட்டு ஒத்திகை பார்த்துக் கொண்டிருந்தது. மானசீகமாக வெங்கட்ராமனுக்குக் கவுண்டமணி ஸ்டைலில் ஓர் உதை கொடுத்து, மாமி தன்னை இதமாக்கிக் கொண்டிருந்தாள்.

மேஜையின் மேல் இரண்டு குத்து விளக்கு எரிந்து கொண்டிருக்க, நடுவே மாலையும் கழுத்துமாகக் குந்திக் கொண்டிருந்த தன் குலதெய்வமான வத்தல்குண்டு வடாம் மலையான் படத்தைப் பார்த்துக் கன்னத்தில் போட்டுக் கொண்டாள். "வடாம் மலையானே! இந்த வடாம் வகுப்பை நல்லபடியா முடிச்சுக் கொடுத்துடு... உனக்கு வடாம் மாலை... அடச்சே... வடைமாலை பண்ணிப் போடறேன்!"

மாமி உணர்ச்சி வசப்பட்டுக் கொஞ்சம் சப்தமாக முறையிட, வாசலில் ஒரு 'க்ளுக்' கேட்டது. மாமி விலுக்கென்று அத்திசை நோக்க ஷீலா ஜோசப் தனுக்காக நின்று கொண்டிருந்தாள்.

மாமி தன் சாமியிடம் நேர்ந்து கொண்டதைக் கேட்க நேர்ந்ததில், ஷீலா சிரிப்பும் வாயுமாக, வகுப்பின் முதல் மாணவியாக ஆஜர் ஆனாள்.

"ஹி... ஹ... கம் இன்!" என்று ஷீலாவை வரவேற்று, அவளை ஹாலில் போடப் பட்டிருந்த வத்தல் தொத்தலான பெஞ்சின் ஓர் ஓரத்தில் உட்கார வைத்தாள் மாமி. 'தளதள'ன்னு குஷ்பூ மாதிரி உடம்பை குஸ்கு மொஸ் குன்னு வைச்சுண்டாப் போதுமா.. ஒரு வத்தல் வடாம் போடத் துப்பில்லாம கத்துக்க வந்திருக்கே..... இதிலே வரும் போதே சிரிப்பு வேண்டிகிடக்கோ சிரிப்பு....' உள்ளுக்குள் வடாமாய்ப் பொரிந்தாள்.

அடுத்த பத்தாவது நிமிடம் அகிலாண்டம், வைதேகி வரதராசன், பாக்யத்தம்மாள், மும்தாஜ் நூருல்லா, ராதா நாயர், ருக்மணி ராமரெட்டி, லதா சச்தேவ், சேஷ்மா பீம்சிங் என்று ஒருவர் பின் ஒருவராக வர, ஒரு தேசிய ஒருமைப்பாட்டுப் பாடலுக்குத் தோதான கூட்டம் ஹாலில் நிறைந்தது.

உச்சவரம்பில்லாத ஒரு கடூரமான உச்ச ஸ்தாயியில் வடாம் மலையானைத் துதித்து மாமி பாடிவிட்டு கிளாஸைத் தொடங்கினாள்.

"வடாம் ஈஸ் அன் ஏன்ஷியண்ட் சைட் டிஷ். உப்பொரப்பான இதைச் சாப்பிட்டதினால்தான் ஹரப்பா நாகரிகமே வளர்ந்திருக்கக் கூடுமென்று சரித்திர ஆசிரியர்கள் கருதுகிறார்கள். ரைஸ் வடாம் வோர் பேமஸ் டியூரிங் சேர, சோழா பீரியட்... ஒன்லி ஆஃப்டர் முகல் ரீஜிம் 'ஜவ் ரைஸ்' வடாம் அண்ட் ஆனியன் வடாம் வோர் இண்ட்ரொட்யூஸ்டு...." மாமி, வெங்கட்ராமன் எழுதிக் கொடுத்திருந்த கட்டுக் கதையைக் கக்க ஆரம்பித்ததும் ஷீலா அதை 'கட்' செய்தாள்.

"எக்ஸ்க்யூஸ் மீ.... வாட் இஸ் மெண்ட் பை 'ஜவ் ரைஸ்' வடாம்?"

பாதியில் குறுக்கிடப்பட்ட பட்ஜெட் உரையில் பாதிக்கப்பட்ட நிதியமைச்சராய் மாமி எரிச்சலடைந்தாள். இருந்தாலும் சமாளித்துக் கொண்டு, "இங்கிலீஷ்ல ஜவ்வரிசிக்கு ஜவ் ரைஸ். இது தெரியாதா என்ன!" என்றாள்.

அகிலா கார்த்திகேயன்

அப்போதுதான் மாமி எதிர்பார்க்காத ''ஹே......'' என்று ஒரு சிரிப்பொலி அங்கு எழுந்தது.

''தமிழ்லேயே சொல்லேண்டி வர்ஷினி... எங்களுக்கெல்லாம் புரியும்.'' தன் எழுபதாவது வயதிலும் முதியோர் கல்வியாக வடாம் வகுப்பிற்கு வந்திருந்த வாலாம்பாள் பாட்டி உரிமையாக வர்ஷினி மாமியைக் கேட்டுக் கொண்டாள்.

மாமிக்குப் படபடவென்றது. வடாம் மாவாய் முகத்தில் பிசு பிசுத்த வியர்வையைக் கைக்குட்டையால் துடைத்துக் கொண்டாள். விடுபட்ட முகவுரையின் தொடர்ச்சி மறந்து விட்டிருக்க, தன் சொந்தச் சரக்கை எடுத்துவிட ஆரம்பித்தாள்.

''நம் உடலுக்குத் தேவையான அறுபத்து நாலுவகை மூலாதார ஊட்டச்சத்துக்கள் அடங்கியது வடாம்!'' என்று ஏதோ டி.வி. விளம்பரத்தைக் காப்பியடித்துக் கதைவிட்டதில், ''வளரும் குழந்தைகளுக்கு இன்றியமையாத பால் புரதம் அடங்கியது'' என தத்துப் பித்தென்று மாமி உளற, மறுபடியும் 'கொல்' என்ற காமடி ஷோ பின்னணி அவளைக் கொன்றது.

மாமிக்குப் பற்றிக் கொண்டு வந்தது. அவர்கள் மேல் பாய்ந்து பிடுங்க வேண்டிய அளவிற்கு ஆத்திரம் வந்தது. வகுப்புக்கான கட்டணமாக அவர்களிடமிருந்து கரந்திருந்த கரன்சி நோட்டுக்களை எண்ணி அதை அடக்கிக் கொண்டாள். மாமியின் மொத்த ஆத்திரமும் மடை திறந்து தன்மேல் மோதப் போவதை உணராமல் வசூல் பணத்தைப் பத்தாவது முறையாக எண்ணிப் பார்த்தபடி உள்ளே உட்கார்ந்திருந்தார் வெங்கட்ராமன்.

**வ**ர்ஷினி மாமியைத் திடுதிப்பென்று பெண் பார்க்கப் போன வெங்கட்ராமன், அவளை வடாம் மாவும் கையுமாகத்தான் பார்க்க நேர்ந்தது. உடனே பெண் பார்த்துவிட்டுச் செல்ல வேண்டுமென அவர் அவசரப்படுத்தவே, வர்ஷினியின் தாயார் சொஜ்ஜி தயார் செய்யாத நிலையில் வடாம் மாவையே ஓர் உருண்டை பிடித்து பஜ்ஜிக்குப் பக்கத்தில் வைத்துப் பரிமாறினாள். இப்படி வடாத்துடன் தன் வாழ்க்கையை ஈஷிக்கொண்டிருந்த வர்ஷினிக்கு வாழ்க்கைப் பட்டபின் வெங்கட்ராமனுக்குக் கோடை ஏன்தான் வருகிறது என்றிருந்தது.

வர்ஷினி மாமியின் நாக்கு, நாசரின் மூக்கு அளவிற்கு நீளம். நல்ல வக்கணையாகச் சாப்பிட வேண்டும் அவளுக்கு. சமைப்பதில் புலி. சைட் டிஷ் தயாரிப்பதில் எக்ஸ்பர்ட். சித்திரை வந்துவிட்டால் நித்திரை கொள்ளாது மாமிக்கு.

''ஒரே வெயிலா இருக்கே... ஆபீஸுக்கு ஒரு வாரம் லீவ் போடுங்களேன்....'' என்று கரிசனமாகச் சொல்லும் போது, வர்ஷினியின் சுயதரிசனம் என்ன என்பது வெங்கட்ராமனுக்குத் தெரியாது. அவள் சொன்னபடியே ஆபீஸுக்கு





ரசிகர் மன்றத்தினர்

## நற்பணி புரியும் ரசிகர் மன்றம்!

நடிகர் ரசிகர் மன்றம் என்றால் ஒரு மாதிரி எண்ணிய காலம் மாறி விட்டது. போட்டி இப்போது நற்பணிகள் புரிவதில் தான் பெரும்பாலும். அன்னதானம் செய்வது; வீதிகளைத் துப்புரவு செய்வது; இலங்கை அகதிகளுக்கு உதவி; முதியோருக்குத் துணி வழங்குதல்; மகளிருக்குக் கோலப் போட்டி; பள்ளி மாணவர்களுக்கு ஜியாமெட்ரி பாக்ஸ், ஊனமுற்றோருக்கு உதவி என்றெல்லாம் செய்கிறார்கள் கடலூர் ரஜினி ரசிகர் மன்றத்தினர். முனிசிபாலிடியில் சொல்லி, ஐந்து வருடமாகக் குடிநீர் வழங்கலில் இருந்த தட்டுப்பாட்டை நீக்கியது குறிப்பிடத்தக்க சாதனை. "இப்போது நூலகம் வைக்க முயற்சி செய்கிறோம்!" என்கிறார் செயலர் பாலமுருகன்.

விடுப்புக் கொடுத்துவிட்டு, அடுத்தநாள் சாவகாசமாக உறங்கிக் கொண்டிருப்பார்.

"இப்படி தூங்கறதுக்கா உங்களை லீவு போடச் சொன்னேன்... வெயில் வீணாப் போறது... சீக்கிரம் எழுந்து தொலைங்க."

மனைவியின் திடீர்மாற்றத்தின் காரணம் புரியாமல், வெங்கட்ராமன் விழித்து, தூக்கத்தில் இடுப்பை விட்டு நழுவியிருந்த தன் வேட்டியைத் தேடிக் கிடைக்காமல், லெகர் செவன்-அப் ஃபிடோ-டிடோ பையன் போல அண்டர்வேருடன் எழுந்து நிற்பார். கிட்டத்தட்ட அதே போஸில், அவர் இடுப்பிலிருந்த வேட்டி விரிப்பில் பிழியப்பட்ட வடாத்திற்கு மொட்டை மாடியில் சோளைக் கொள்ளை பொம்மையாகக் காவலிருக்கும்படி கட்டளையிடப்படுவார்.

பொசுக்கும் வெயிலில் பசிக்கு வடாம் மாவைப் பந்தாக உருட்டி உள்ளே தள்ளியதில், அதன் காரம் தாளாமல் 'ஸ்லோ... ஸ்லோ' என்று அவர் நாவு தவிக்க, அதைச் 'சோ... சோ' என்று தவறாகப் புரிந்து கொண்டு காக்கைகள் நெருங்கத் தயங்கும்.

அரிசி வடாத்திலிருந்து ஆரம்பித்து ஜவ்வரிசி வடாம், கொச்ச வடாம், குச்சி வடாம், குழம்பு வடாம், வெங்காய வடாம், தவிசை வடாம், பொரி வடாம் என்று தினம் ஒரு வடாமாகப் போட்டு அவரை வாட்டுவாள் மாமி. அந்த ஏழு நாட்களோடு, கொசுறாக இன்னும் மூன்று நாட்களுக்கு வடாத்துடன் அவர் காய வேண்டி வரும்.

கத்திரியில் கொத்தவரையாய்க் காய்ந்து, மெலிந்து போவார் வெங்கட்ராமன். ஆபீஸுக்குப் பொய் சொல்லி மருத்துவ விடுப்புப் போட்டவர், வெயிலின் பாதிப்பால் வயிற்றில் மெய்யாலுமே கடுப்பு ஏற்பட, விடுப்பைத் தொடர நேரும்.

இப்படி சித்திரைதோறும் சித்திரவதை அனுபவித்த வெங்கட்ராமனுக்கு வடாம் என்றாலே 'தடா'வாய் பயம் கண்டது. சரி, தனக்குப் பின் தன் பிள்ளையோ, பெண்ணோ தலை எடுத்து, வெயிலில் காயல் மற்றும் காவல் கடனைத் தீர்ப்பார்களென்று எண்ணி, ஏமாந்தார். அவர்கள் என்னடாவென்றால் கோடை விடுமுறை ஆரம்பித்தவுடன் தியானப் பயிற்சி, நீச்சல் பயிற்சி, போட்டா பயிற்சி என்று யார் யாரோ பணம் பிடுங்க நடத்தும் சம்மர் கோர்ஸ்களுக்குத் தண்டம் அழுது தப்பித்துக் கொண்டனர்.

இது வெங்கட்ராமனை யோசிக்க வைத்தது. ஏன் தம் வீட்டிலும் சம்மர் கோர்ஸாக 'வடாம் மேக்கிங்' சொல்லித் தரக் கூடாதென்று சிந்தித்தார். பத்துநாள் கோர்ஸுக்கு தலைக்கு நூறு ரூபாய் என்று வசூல் செய்தால் போதும். கையிலே காக... வெயில் கிளாஸ் ஆக.... வகுப்பை நடத்தப் போகும் வர்ஜினியும் மாணவிமணிகளுமே காயும் வடாத்திற்குக் காவலிருக்க நேருமாதலால் தமக்கு விடுதலை கிடைத்துவிடுமென்று திட்டம் தீட்டினார். முதலில் வழிக்கு வர மறுத்த வர்ஜினிக்கு வடாம் வகுப்பு வசூலில் இரட்டை வடம் வாங்கிக் கொள்ளலாமென்று ஆசைகாட்டிப் பணியச் செய்தார். தாமும் வகுப்பின் முதல் நாள் லீவ் போட்டுவிட்டு ஒத்தாசை செய்வதாக உறுதி கூறினார்.

பேப்பரில் வரி விளம்பரம் கொடுத்ததிலிருந்து வரிசையாக வந்து குவிந்த விண்ணப்பங்கள் மாமியை பயமுறுத்த ஆரம்பித்தன. தன்னை எக்கச்சக்கமாக மாட்டிவிட்டு விட்டாரோ என்று வெங்கட்ராமன்

மேல் எரிச்சல் பட்டாள். எதிர்ப்பார்த்தது போலவே வகுப்பின் முதல் நாளின் மேற்படி நிகழ்ச்சிகள் மாமிக்கு இகழ்ச்சியை அளித்திருந்தன.

"முதலில் அரிசி வடாம் செய்முறை பத்திப் பாப்போமா!" என்று சிரிப்பொலிகளைத் தாங்கிய மனத்தோடு வர்தினி வகுப்பைத் தொடர்ந்தாள்.... "இதோ இருக்கே, பாத்திரத்திலே வெள்ளையா ஒரு புவுடர்.... இதுதான் அரிசி மாவு. இதிலே கால்பங்கு தண்ணீர் விட்டு, அடுப்பில் வைத்துக் கிளறி, நாலு எலுமிச்சம்பழம், இருபது பச்சைமிளகாயை அரைத்து எடுத்த விழுதை..." மாமியை முடிக்கவிடாமல் 'உஸ்... உஸ்' என்று சுற்றிலும் சப்தம் வந்தது. பச்சை மிளகாய் விழுது என்று சொல்லும் போதே பலரது நாக்கு பழுது பட்டுவிட்டதோ என்னவோ தெரியவில்லை!

"சைலன்ஸ்" என்று மாமி கடுமையாகக் கத்த....

"மிளகாய் விழுதைக் கையிலேயா எடுக்கறது?" என்று அல்சர் வியாதிக்காரியான அகிலாண்டம் பயந்தபடி கேட்க.....

"மேடம் நீங்க கிளவுஸ் போட்டுக்கலே" என்று யதார்த்தமாகத்தான் ருக்மிணி ராமரெட்டி வினவியிருக்க வேண்டும். மாமியின் பொல்லாத நேரம், கிளவுஸ் என்பது பிளவுஸ் என்று காதில் விழப் போய்....

"என்ன அசிங்கமான கேள்வி இது. 'பிளவுஸ்' போட்டிருக்கேனான்னு.... சே..." என்று மாமி வள்ளென்று அவள் மேல் விழுந்தாள். உடனே கோடை இடியாகச் சிரிப்பு வெடிக்க, ஒரு 'கொல்'லிசை மழை பொழிய ஆரம்பித்து, அடங்க முடியாமல் தவித்தது. அவமானத்தால் நிலை குலைந்து போன மாமியை, அந்தச் சிரிப்பலையிலிருந்து தனித்துக் கேட்டுக் கொண்டிருந்த 'கெக்கெக்கே' என்ற வெங்கட்ராமனின் இளிப்பு ஈர்த்தது..... 'பாவி மனுஷா சேர்ந்தா சிரிக்கிறீர்?' மாமி கருவிக் கொண்டாள்.

ஒருவழியாக வடாம் மாவு செய்முறை போதனை முடிந்தது.

"இப்படி அல்வா பதத்தில் மாவைக் கிளறி இறக்க வேண்டும்... பின்பு வேட்டி அல்லது பாலிதின் ஷீட் விரிப்பில் அதைப் பிழிய வேண்டும்... எப்படிப் பிழிவது... எத்தனை வகை அச்சுக்களால் பிழியலாம்.... பிழிந்தவற்றை எப்படி காய வைத்துப் பாதுகாக்க வேண்டும் போன்ற செய்முறை விளக்கங்களை அவுட்டோர் கிளாஸில், அதுதான் மொட்டை மாடியில் கொளுத்தும் வெயிலில் நீங்கள் கற்றுக் கொள்ளப் போகிறீர்கள்...."

மாமி ஹாலில் சொல்லிக் கொண்டிருந்தபோது, உள்ளே அறையில் வெங்கட்ராமனுக்குக் கடந்த காலங்களில் தாம் காய்ந்த நினைவுகள் வந்ததில், இப்போது அப்பாடா தப்பித்தோமென்றிருந்தது. அந்தப் பன்னிரண்டு மணி கத்திரி உச்சி வெயிலில் வாழ்க்கையில் முதல்நாளாக ஃபானை ஓடவிட்டு சுகமாகத் தூங்கப் போவதை நினைத்து இன்பத்தில் திளைத்துக் கொண்டிருந்தார். இனி, வர்தினியும் வகுப்புப்படைகளும் மொட்டை மாடிக்குப் போக வேண்டியதுதான் பாக்கி.

"அப்ப நீங்களெல்லாம் மாடிக்குப் போய் வெய்ட் பண்ணுங்க.... மை ஹப்பி,



"பயப்படும்படியாக எதுவும் இல்லை. உங்களுக்கு வந்திருப்பது சாதாரண ஜுரம்தான்...!"

" 'பில்'லும் பயப்படும்படி இல்லாமல் சாதாரணமா இருக்குமா, டாக்டர்!"

– விக

தட்ஸ் மிஸ்டர் வெங்கட்ராமன் வில் டேக் யூ டு அவுட்டோர் கிளாஸஸ்... அவருக்கு இந்தத் துறையில் சுமார் இருபது வருடகால ஆழ்ந்த அனுபவம் உண்டு... எல்லாரும் மாடிக்குப் போங்க. அவர் பின்னாலேயே வருவார்."

திடீர்த்தாக்குதலின் பாதிப்பிலிருந்து மீளாத வெங்கட்ராமனின் முன் வர்தினி மாமி வந்து நின்றாள்.

"உங்களைத்தான்... இன்னும் பத்து நாளைக்கு கிளாஸ் முடியற வரைக்கும் நீங்கதான் அவுட்டோர் வாத்தியார்... ஆபீஸ் பக்கம் தலை வைக்கக் கூட படுக்கக் கூடாது ஆமாம்...."

அசடு பிச்சுவாக நின்ற வெங்கட்ராமன் கையில், வடாம் பிழியும் அச்சுக்களைத் திணித்து, எட்டடுக்கு மொட்டை மாடியில் ஏற்றிவிட்டு விட்ட வர்தினி, ஃபானும் படுக்கையுமாக ரெஸ்ட் எடுக்க ஆரம்பித்தாள்.

# காதலின் சுவடுகள்



பொன் விழா கவிதைப் போட்டி

தாமரை

மழை பெய்ததும் மலர் கொய்ததும்
உடை நனைந்ததும் உனை நினைந்ததும்
நினைவிலே காயமாய்
நின்றுதான் போனதே!

நீ வந்ததும் நிழல் தந்ததும்
துணைகண்டதும் துயில் கொண்டதும்
வானிலே நிலவு போல்
வந்துதான் போகுதே!

கரம் தொட்டதும் கனல் இட்டதும்
இதழ் குவிந்ததும் இருள் கவிந்ததும்
கண்ணிலே ஈரமாய்
கலந்துதான் போனதே!

வழிபார்த்ததும் விழி பூத்ததும்
உயிர் போனதும் உடல் வாழ்வதும்
நேற்றுதான் நிகழ்ந்ததாய்
நெஞ்சிலே வேகுதே!

ஏன் வந்தெனை உன்வசமாக்கினாய்?
காதல் தந்தெனைக் கைதாக்கினாய்?
நகர்கின்ற மேகமாய்
நள்ளிரவின் கோலமாய்
நில்லாது போயிருந்தால்
நான்கூட ரசித்திருப்பேன்
நாளெல்லாம் சிரித்திருப்பேன்

காதலின் சுவடுகள் கடுமையாய்ப் பதிந்ததால்
வெறுமையின் வட்டத்தில் வேதனை ஆரத்தில்
வாழ்வதே பாரமாய் வலிகளே சாரமாய்
ஆகித்தான் போனது ஆழமாய் நோகுது!

சாதனை அல்லவே சாகவும் இல்லையே
வேதனை மீறியும் வாழ்வதன் காரணம்
நிகழ்ந்தது யாவுமே நிறைவையே தந்ததால்
நெஞ்சிலே ஒரு குரல் வேள்வியே என்றதால்

# இடிமுழக்கத் தலையங்கம்!

◆ 'ஜெ.வும் ஜால்ராவும்' தலையங்கம் கண்டேன். அப்பட்டமான உண்மைகளைப் பயப்படாமல் எழுதியிருந்தது பாராட்டத்தக்கது. தமிழக மக்கள் ஜால்ராக்களைக் கேட்டுக் கேட்டுக் காது செவிடாகும் நிலையே வந்து விட்டது போங்கள்!
சென்னை - 15, ஜெ.ஏ. ராஜேஷ்.

◆ ஜால்ரா சத்தத்தில் மயங்கிக் கிடக்கும் 'ஜெ' அரசுக்கு, நீங்கள் கூறும் இடிமுழக்கத் தலையங்க ஓசை எங்கே கேட்கப்போகிறது!
திருவட்டார், பைரவி.

◆ முதலாவது கார்ட்டூனை இந்த ஆட்சிக் காலம் முடிகிற வரையிலும் தொடர்ந்து பிரசுரிக்கலாம் போல் இருக்கிறது.
வேலூர், கனிமொழி.

◆ நரசிம்மராவுக்கும், அத்வானிக்கும் நடந்து வரும் பூசலில் ஜனநாயகம் என்ன பாடுபடுகிறது என்பதைச் சித்திரித்த கார்ட்டூன் வெகு ஜோர்!
கும்பகோணம்,
புலவர் எஸ்.கே. மூர்த்தி.

◆ பணம் காய்க்கும் மரமான தேக்கு பற்றிப் பயனுள்ள விவரங்களை எடுத்துத் தந்ததற்குப் பாராட்டுக்கள்!
மதுரை - 8,
அ. ராஜா ரஹ்மான்.

◆ என்னைப் போன்ற நடுத்தர வர்க்கத்தினரை இன்றைய நவீன நாகரிக உலகம் எப்படியெல்லாம் நடுங்க வைக்கிறது என்பதைத் தெளிவாக எடுத்துக் காட்டியிருந்தது 'ஷாக் அடிக்கும் ஷாப்பிங் மோகம்.'
பெங்களூர் - 21, ப. மூர்த்தி.

◆ லட்சக்கணக்கானவர்களின் உள்ளக் குமுறலை வார்த்தைகளில் வடித்த கட்டுரை 'ஷாக் அடிக்கும் ஷாப்பிங் மோகம்.'
சென்னை - 84,
மா. சுப்பிரமணியன்.

◆ தராசு அளித்துள்ள பதில் தவறானது. 'முகராசி உள்ள மகராசி' என்று பேசியது பகுத்தறிவுப் பாசறையில் வந்த அ.இ. அ.தி.மு.க. எம்.எல்.ஏ. அல்ல; தஞ்சை மாவட்டம் திருவோணம் தொகுதி இந்திரா காங்கிரஸ் எம். எல். ஏ. சிங்காரம்தான்.
திருக்குவளை,
வெற்றிப்பேரொளி.

◆ சத்தியப்பிரியனின் 'விரும்பிக் கேட்டவை' சிறுகதை படித்தேன். தான் விரும்பிய ஒருத்திக்காக, அவள் விரும்பும் சகலத்தையும் பெற்றுத் தரும் உயரிய நோக்கில் தன் காதலையே விட்டுக் கொடுக்கும் முரளி, காதலின் மற்றுமொரு பரிமாணத்தைக் கட்டிக் காட்டுகிறான்.
திருச்சி - 4,
தா.ஜ. செந்தில் குமார்.

◆ பாரதிபாலன் தமது "தலைவர்" சிறுகதையில் தலைவர் + தொண்டர் உறவினை மிக நாசூக்காகத் தெளிவு படுத்தியிருக்கிறார்.
கீழ்வேளூர்,
கோ. தியாகராஜன்.

◆ 'முன்பும் பின்பும்' என்ற சிறந்த சிறுகதை தந்த ஆர். சூடாமணிக்குப் பாராட்டுக்கள்.
கடையம், அன்பின் செபா.

◆ என் ஏழு வயது மகள் கூட ஒவ்வொரு வாரமும் 'ஜில்லு ஜானு'வுக்காகக் காத்திருக்க ஆரம்பித்துவிட்டாள்!
கரடிபாவி, பூ. பெருமாள்சாமி.

◆ நம்பிக்கைக் கேணியின் ஆழத்தை உள்ளடக்கியதாக இருந்தது. இவ்வாறக் கவிதை. முற்போக்குக் கவிதைகளைப் பிரசுரிப்பதில் கல்கி தனது முத்திரையைப் பதித்து விட்டது.
சாமல்பட்டி,
சமுதாயப் பிரியன்.

◆ பாகற்காய் சாப்பிடுவதால் நீரழிவு நோய்க்கு எந்தப் பயனும் இல்லை. (டாக்டர் பதில் கல்கி 17.5.92) ஆனால் அவரைக்காய் நீரழிவு நோய்க்கு மிகவும் சிறந்தது. சிறுநீரில், ரத்தத்தில் சர்க்கரையின் அளவை அவரைக்காய் (வேக வைத்தது) குறைக்கிறது. இது சோதித்து அறியப்பட்ட உண்மை. அவரைக்காய் நீரழிவு நோயைக் குணப்படுத்தாது. ஆனால் கட்டுக்குள் வைத்திருக்கும். இதைப்போல் உதவும் மற்றொன்று முள்ளங்கி. இதிலிருந்து இன்சுலினைப் போன்ற மருந்து ஒன்றைத் தயாரிக்க ஜெர்மனியில் ஆய்வுகள் நடந்து கொண்டு இருக்கின்றன என Australian Journal of Medicine கூறுகிறது!
பொடிநாயக்கனூர், டாக்டர்
இரா. இரவிச்சந்திரன்.

## கமலுடன் ஒரு நாள்

ஜூன் 15ல காலை முதல் கமலுடன் ஒரு நாள் முழுவதும் செலவிட்டு, அன்று மாலை அவரிடமிருந்து ஒரு பரிசும் பெற, ஐம்பது அதிர்ஷ்டசாலிகள் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப் படுகின்றனர். இதற்காகத் தமிழ்நாட்டின் முக்கிய நகரங்களில் ரூ. 10 பெறுமானமுள்ள பரிசுச் சீட்டுக்கள் விற்பனையாகின்றன. இந்தியா ஹவுஸிங் ஃபைனான்ஸ் டெவலப்மெண்ட் நிறுவனத்தின் தமிழ்நாடு, பாண்டிச்சேரி கிளைகளில் கிடைக்கும். வசூலாகும் தொகை தென்னிந்திய நடிகர் சங்க அறக்கட்டளைக்கு நன்கொடையாக அமையும். முடிவு தேதி : 5.6.92.

வி. கோபாலகிருஷ்ணன்,
[illegible].

# நெஞ்சிருக்கும் வரை: நீங்கள் பார்த்ததும் பார்க்காததும்!

திரும்பிப் பார்க்கிறேன் - 35

போரில் ஈடுபட்டதன் விளைவாக ஒரு காலை இழந்த ராணுவ கர்னல். ராணுவ அனுபவங்களைச் சுவைபடக் கூறும் பழக்கம் உள்ளவர். தேச நலனுக்காக எதையும் தியாகம் செய்யத் தயாராக இருப்பவர். கண்டிப்பானவர். - இதுதான் நான் சிவாஜிக்கு உருவாக்கிய கேரக்டர்.

கேரக்டரை நான் விவரிக்க விவரிக்க, சிவாஜி, மத்தாப்பூ பார்க்கும் குழந்தையின் குதூகலத்துடன் என்னைப் பார்த்துக் கொண்டிருந்தார். ''ஸ்ரீதர்! ஏ கிளாஸ் கேரக்டர்! பிச்சு உதறி விடலாம்'' என்றார்.

சிவாஜியை இவ்வளவு தூரம் அந்த ரோல் கவர்ந்து விட்டது என்றதும் ''நெஞ்சிருக்கும் வரை'' கதையை உருவாக்குவதில் கவனம் செலுத்தினேன்.

ஓய்வு பெற்ற ராணுவ கர்னலுக்கு இரண்டு பிள்ளைகள். மூத்த பையன் திருமணமாகி ராணுவத்தில் பெரிய பொறுப்பில் இருக்கிறான். இரண்டாவது மகன் எம். ஏ. படித்து விட்டு வேலை தேடுகிறான். அவனுக்கு ஒரு காதலி. ஒரு பள்ளிக்கூட ஆசிரியரின் மகள். இந்த விஷயம் பற்றிக் கேள்விப்பட்ட கர்னல் கோபங்கொண்டு, ''வேலையில்லாத ராஸ்கல், உனக்கென்னடா காதலும் கத்திரிக்காயும்'' என்று திட்டுகிறார்.

மகன் கோபித்துக் கொண்டு வீட்டை விட்டு ஓடி விடுகிறான். ஆனால் மறுபடி திரும்பி வரும் போது, அப்பா கோபத்தை மறந்து அன்புடன் வரவேற்கிறார். காரணம், மகன் இப்போது விமானப் படை அதிகாரி... கதையின் இறுதியில் அண்டை நாட்டுடன் நடக்கும் யுத்தத்தில் இரண்டு மகன்களையுமே பறிகொடுக்கிறார் கர்னல். இதுதான் கருக்கமாக ''நெஞ்சிருக்கும் வரை'' திரைக்கதை.

படத்துக்கு சிவாஜி தவிர, முத்துராமன், கே. ஆர். விஜயா, ஏ. வி. எம். ராஜன், பாரதி முதலியவர்களை நடிக்கச் செய்வது என்று முடிவு செய்து, இவர்களுக்கு மட்டுமின்றி, சிவாஜிக்கே கூட மேக் அப் டெஸ்ட் நடத்தினேன். அவருடைய தோற்றம் ராணுவ உடையில் கம்பீரமாக அமைந்திருப்பதைப் பார்த்து எல்லோரும் ரசித்து மகிழ்ந்தோம். தேசப்பற்று என்பதை மையமாகக் கொண்ட ஸீரியஸ் படம் என்பதால் கலர் வேண்டாம் என்று தீர்மானித்தேன். போஸ்டர்கள் கூட கறுப்பு வெள்ளையில் மட்டுமே அமைய வேண்டும் என்று திட்டமிட்டேன்.

''நெஞ்சிருக்கும் வரை'' ஷூட்டிங்குக்கு நாள் குறிக்கும் சமயத்தில் ஒரு சிக்கல்! ரஷ்ய அதிபரின் முயற்சியால், டாஷ்கெண்டில் லால் பகதூர் சாஸ்திரியும் அயூப்கானும் சந்திக்க, ''டாஷ்கெண்ட் ஒப்பந்தம்'' ஏற்பட்டு விட்டது!

இந்தச் சூழ்நிலையில் அண்டை நாட்டுடன் நடக்கும் யுத்தத்தை மையமாகக் கொண்ட படத்தை எடுப்பதா வேண்டாமா? எடுத்த பிறகு, 'ராஜீய உறவுகளைப் பாதிக்கும்' என்று காரணம் காட்டி சென்ஸார் தடை வருமோ? சிவாஜியைக் கலந்தாலோசித்தேன். ''நாம் இந்தப் படம் எடுப்பதே தேசநலனைக் கருதித்தான். ஆனால் புதிய சூழ்நிலையில் இந்தப் படமே தேச நலனுக்கு விரோதமாகி விடுமோ என்று அஞ்சுகிறேன்'' என்றேன்.

சிவாஜி என் கருத்தை ஆமோதித்தார். ''தேசநலனுக்காக எத்தனையோ பேர் எவ்வளவோ தியாகம் செய்திருக்கிறார்கள்; நீங்கள் ஒரு கதையையும் நான் ஒரு கேரக்டரையும் தியாகம் செய்யக்கூடாதா என்ன?'' என்றார். ''ஜெய் ஹிந்த்'' என்று கூறி விடைகொடுத்தார்.

மறுபடி கதை தேடும் படலம் தொடங்கினேன். ஆனால் தலைப்பு மட்டும் ஏற்கெனவே தீர்மானித்து விட்டிருந்தேன்! ஆம், ''நெஞ்சிருக்கும் வரை'' என்ற தலைப்பு என்னை அவ்வளவு தூரம் கவர்ந்து, மனத்தில் ஆழப் பதிந்து விட்டிருந்தது. அதே தலைப்புக்கு வேறு ஒரு கதை உருவாக்கத் திட்டமிட்டேன்.

கல்கத்தா விசுவநாதனுடன் சேர்ந்து, சில வங்க மொழி நாடகங்களைப் பார்த்தது என் நினைவுக்கு வந்தது. கல்கத்தாவில் கல்லூரியில் படித்துக் கொண்டே வங்கத் திரைப்படங்களிலும், சில தமிழ்ப் படங்களிலும் நடித்தவர் விசுவநாதன். அந்த நண்பருடன் சேர்ந்து பார்த்த நாடகங்களுள் ஒன்று காளிபானர்ஜி நடித்த ''ஷுதா''. பசி என்பது இதன் அர்த்தம். பசி ஒருவனுடைய வாழ்க்கையில் எந்த அளவுக்கு பாதிப்புக்களை ஏற்படுத்தும் என்பதை உணர்த்திய அந்த நாடகம், என் மனத்தில் ஆழமான பாதிப்பை ஏற்படுத்தியிருந்தது. அந்தக் கதையை அப்படியே எடுத்துக் கொள்ளாமல மையக் கருத்தை மட்டும் ஏற்று, கேலியும் கிண்டலும் பொங்கும் நடையில் புதியதொரு கதை கற்பனை செய்தேன். வறுமையின் பிடியில் சிக்கும் என் கதாநாயகன்,

டைரக்டர் ஸ்ரீதர்

அங்கதபாணி நகைச்சுவை உணர்வோடு (satire) அதைச் சமாளிப்பான்.

''நெஞ்சிருக்கும் வரை'' திரைப்படத்திலும் வழக்கம் போல் ஒரு புதுமை செய்தேன். படத்தில் யாருக்குமே மேக்-அப் கிடையாது! ஏனோ இந்த விஷயம் அன்று பலரது கவனத்தைக் கவரவில்லை. ஆனால் பிற்காலத்தில் இதையே வேறு சில டைரக்





☛ அரசியலில் திருப்பம்; திரைப்படத்திலும் திருப்பம்!

டர்கள் செய்த போது, அது, பெரிய புரட்சியாகக் கருதி பேசப்பட்டது! என் படத்தில் சிவாஜி, முத்துராமன், கே. ஆர். விஜயா முதலிய யாருக்குமே மேக்-அப் கிடையாது. இந்தப் புதுமையான முயற்சிக்கு தயக்கமோ யோசனையோ இன்றி அவர்கள் ஒத்துழைப்புத் தந்ததை நெஞ்சிருக்கும் வரை என்னால் மறக்க முடியாது!

வர்த்தக ரீதியில் படம் பெரிய அளவில் லாபம் சம்பாதிக்கவில்லை என்றாலும் 'நெஞ்சிருக்கும் வரை' ஒரு நல்ல படம் என்று மதித்து மக்கள் ஏற்றுக் கொண்டார்கள். படத்தில் சிவாஜி, கே. ஆர். விஜயாவைக் காதலிக்க, விஜயாவோ முத்துராமனைக் காதலிப்பார். இறுதியில் சிவாஜி இறந்து போய் விடுவார். மக்களைப் பொறுத்தமட்டில், தங்கள் ஹீரோவை எப்போதும் எதிலும் வெற்றி பெறுகிறவனாகவே நினைக்கிறார்கள். இந்த மனோபாவம்தான் படம் பணம் குவிக்காததற்குக் காரணம். இந்த 'செண்டிமெண்ட்' எனக்குப் புரிந்தது. ஆனால் படத்தின் கதையும் முடிவும் அவ்வாறு அமைந்ததற்காக நான் வருத்தப்படவில்லை. ரசிகர்களின் எண்ணத்தை மதிப்பவன்தான் நான். ஆனால் அதே சமயம் எனது கலைத்திறனிலும் எனக்கு நம்பிக்கையும் நன்மதிப்பும் உண்டு.

**டா**ஷ்கெண்ட்டில் சமாதான ஒப்பந்தத்தில் கையெழுத்திட்ட லால்பகதூர் சாஸ்திரி, எனது திரைப்பட திட்டத்தை மாற்றி அமைத்ததற்குச் சில காலம் முன்னதாக யுத்த நிதியும் திரட்டிக் கொண்டிருந்தார்! அப்போது இந்த நாட்டின் கோடானு கோடி மக்கள் தங்களால் இயன்றதைப் பணமாகவோ பொருளாகவோ யுத்த நிதிக்கு அளித்துத் தங்கள் தேசப்பற்றைக் காண்பித்துக் கொண்டார்கள்.

அந்தச் சமயத்தில் சமூக சேவகி, ராஜி ரங்காச்சாரி என்னை அணுகி, ''திரை உலகத்தினரை ஒருங்கிணைத்து, தமிழ்நாட்டின் பல்வேறு நகரங்களிலும் கலை நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்து, நிதி திரட்டி அளிக்கலாமே'' என்று யோசனை தெரிவித்தார். நான் உடனே அந்த யோசனையை ஏற்று, முதன் முதலில் யாரை அணுகினேன் தெரியுமா? சிவாஜியைத்தான்! அவருக்கு ஒரே உற்சாகம். ''பிரமாதப்படுத்தி விடலாம்; புதிதாய் ஒரு நாடகம் எழுது; திரை உலகில் எல்லோருடைய ஒத்துழைப்பையும் பெறலாம்'' என்று என்னை மேலும் ஊக்குவித்தார்.

நானும் கோபுவும் உட்கார்ந்து சில ஸ்கிரிப்டுகள் எழுதினோம். அன்று திரை உலகில் கொடிகட்டிப் பறந்த அனைவருக்கும் வாய்ப்பு அளிப்பது போல் நிகழ்ச்சிகள் தயாரித்தோம். மளமளவென்று மற்ற காரியங்களும் நடந்தன. சென்னை மியூஸிக் அகாடமியில் குறைந்தபட்சக் கட்டணமே நூறு ரூபாய் என்று வைத்தோம்! கோவை, சேலம், மதுரை என்று மொத்தம் ஆறு நகரங்களில் நிகழ்ச்சிகள் நடந்தன. அன்றைய முதலமைச்சர் பக்தவத்சலம் முழு ஒத்துழைப்புத் தந்தார். அந்தக் காலத்திலேயே ஒவ்வோர் ஊரிலும் இரண்டு லட்சம் கலெக்‌ஷன் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்! மொத்த வசூலையும் பெற்றுக் கொள்ள லால்பகதூர் சாஸ்திரி தாமே நேரில் சென்னைக்கு வந்தார்!

அப்போது நடந்த ஒரு ருசிகரமான சம்பவம்... அதை அடுத்த இதழுக்கு ரிஸர்வ் பண்ணிக் கொள்கிறேன்!

# அவசரத் தேவை: இரண்டு பாலங்கள்!

**கா**லை மணி ஒன்பது ஆகிவிட்டால் கடலூரில் மெயின் மார்க்கெட் பகுதியிலுள்ள ரயில்வே கேட் மிகுந்த பரபரப்பை ஏற்படுத்திவிடுகிறது. டிங்... டிங்.... என்று ரயில்வே கேட் ஊழியர் மணியொலி எழுப்பியபடி, விவரைச் சுழற்ற, மெதுவாய் ரயில்வே கேட் மூடிக்கொள்ளும். ஒரு நாளைக்குச் சுமார் ஒரு டஜன் முறை பயணிகள் ரயில்கள் கிராஸ் செய்வதால் மூடப்படுகிறது. இது தவிர, தினம், ஏழெட்டுச் சரக்கு ரயில்கள் வேறு.

இதற்கு மேம்பாலம் கட்டுவதுதான் ஒரே தீர்வு என்பதை அனைவருமே ஒப்புக் கொள்ளுகிறார்கள். ஆனால் மேம்பாலம் அமையவிடாமல் செய்வதில் பலருக்கும் பங்கு உள்ளது. லெவல் கிராஸிங்கை ஒட்டிய லாரன்ஸ் ரோடு முழுக்க நகைக் கடைகள்தான். மேம்பாலம் கட்ட வேண்டுமானால், ரோட்டை அகலப்படுத்த வேண்டும். அதனால் நகைக்கடைகள் அகற்றப்பட வேண்டியிருக்கும்; இல்லையென்றாலும் கூட, மேம்பாலத்தின் அடியில், நகைக் கடைகள் இருக்கும். எனவே மேம்பாலத்தினால் தங்கள் பிஸினஸ் பாதிக்கப்படக் கூடும் என்று நம்பும் நகை வியாபாரிகள், மேம்பாலம் வராமல் இருக்க எல்லாவித முயற்சிகளும் செய்கிறார்கள் என்பது ஒரு பரவலான குற்றச்சாட்டு. ஆனால் இதனை நகை வியாபாரிகள் வட்டாரத்தில் வன்மையாய் மறுக்கிறார்கள்.

லெவல் கிராஸிங்கின் இன்னொரு பக்கத்தில் பஸ் நிலையம். மேம்பாலம் கட்டப்பட்டால், பஸ் நிலையம் வேறு இடத்துக்கு மாற்றப்பட வேண்டும். ஊருக்கு வெளியே தள்ளி பஸ் நிலையம் கட்டுவதைப் பொது மக்களும் சரி, பஸ் நிலையத்தை ஒட்டியுள்ள வியாபாரிகளும் சரி விரும்பவில்லை.

அப்படி என்றால், வேறு என்னதான் தீர்வு இந்தப் பிரச்னைக்கு? மேம்பாலம் கட்டுவதற்கு வேறு ஓர் இடம் தேர்ந்தெடுப்பதுதான். அதன்படி, தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள இடம்தான் ரமேஷ் தியேட்டரை ஒட்டியுள்ள லெவல் கிராஸிங். இங்கே மேம்பாலம் கட்டினால், எல்லாத் தரப்பினரும் திருப்தியடைவார்கள் என்று தோன்றுகிறது.

ஆனால், தமிழ்நாடு அரசு, மத்திய அரசு இரண்டும் இணைந்து திட்டத்தை நிறை

☛ இங்கே கட்டினால் பல்லோருக்கும் திருப்தி...



☛ உப்பனாற்றில் படகுப் பயணம்



☛ [illegible]



வேற்ற முன்வர வேண்டுமே? அது எப்போது?

கூடலூர் பழைய நகர்ப் பகுதியில், ஓடுவது உப்பனாறு. உப்பனாற்றின் அக்கரையில் உள்ள கிராமங்கள் கோரி, சிங்காரத்தோப்பு, சோணாங் குப்பம் ஆகியவை. கடலூர் பழைய நகரினை ஒட்டியுள்ள படகுத் துறையிலிருந்து இரண்டு படகுகள் மூலம்தான் இந்த மூன்று கிராமத்து மக்களுடைய போக்கு வரத்து நடைபெறுகிறது. பல ஆண்டுகளுக்கு முன் ஒருமுறை உப்பனாற்றைப் படகில் கடந்த போது, ஏதோ சிக்கல் ஏற்பட்டு, படகு கவிழ்ந்து விட, இரண்டு பெண்கள் நீரில் மூழ்கி இறந்து விட்டதாய்ச் சொன்னார் ஒரு சோணாங் குப்பத்து மீனவர். சில மாதங்களுக்கு முன்பு, மறுபடி ஒரு படகு விபத்து. இந்தத் தடவை நல்ல காலமாக உயர்ச்சேதம் ஏதுமில்லை.



☛ நெரிசலான ரயில்வே கேட்...

விபத்துக்களை, எப்போதோ நிகழும் சம்பவங்கள் என்று ஒதுக்கி விட்டாலும் கூட, உப்பனாற்றுக்குக் குறுக்கே ஒரு சிறு பாலம் இல்லாத காரணத்தால் இந்த கிராமத்து மக்கள், மிகுந்த அவதிக்குள்ளாகிறார்கள் என்பதில் ஐயமில்லை. அவசரத்துக்கு நோயாளிகளோ, கர்ப்பிணிப் பெண்களோ கடலூருக்கு அழைத்து வரப்பட வேண்டுமென்றாலும் படகையே நம்ப வேண்டிய நிலைமை. பகல் முழுக்க இரண்டு படகுகள் இக்கரைக்கும், அக்கரைக்குமாய்ப் போய்வந்து கொண்டிருக்கின்றன என்றாலும் இரவு நேரங்களில் சங்கடம்தான்.

படகில், சைக்கிளை எடுத்துக் கொண்டு வந்து, கடலூரில் தாம் வேலை பார்க்கும் கடைக்குச் சைக்கிளில் போகிற ராஜுவைப் போன்றவர்களும் இங்கே பலர் இருக்கிறார்கள். வீடு கட்டுகிறவர்கள், செங்கல், சிமெண்ட், மரம் என்று எல்லாவற்றையும், சிரமப்பட்டுப் படகுகளில் தான் எடுத்துக் கொண்டு போக வேண்டியுள்ளது.

''சிங்காரத் தோப்பு கிராமத்தில், கலைஞர் கருணாநிதி முதலமைச்சராய் இருந்த போது பிரம்மாண்டமாய் ஒரு விழாவுக்கு ஏற்பாடு செய்தோம். விழாவுக்கு வரும் கலைஞரிடம் பாலத்தின் அவசியத்தை எடுத்துச் சொன்னால் கவனிப்பார் என்று திட்டமிட்டோம். ஆனால், எதிர் பாராத விதமாக விழாவன்று, பெருமழை பெய்ததில், விழா ரத்தாகி, எங்கள் ஏற்பாடுகள் எல்லாம் வீணாகி விட்டன!'' என்கிறார் சிங்காரத்தோப்பைச் சேர்ந்த முனியப்பன். ''எம்.ஜி.ஆர். ஆட்சியின் போது, பாலத்துக்கான அடிக்கல் நாட்டப்பட்டதேயொழிய, பாலம் என்னவோ கட்டப்படவில்லை. இப்போது அந்த அடிக்கல்லைக் கூட யாரோ பெயர்த்தெடுத்துக் கொண்டு போய்விட்டார்கள்'' என்கிறார் அவர்.

– நிருபர்

## அடுத்த இதழில்...

●● அமிதாப்பின் கடைசிப் படம்
– கவர் ஸ்டோரி

**அமிதாப் சிறப்புப் பேட்டி
மற்றும் டைரக்டர் பேட்டி**



# பரதன்



சபை கூடுகிறது. இந்திரன், சந்திரன், லக்ஷ்மணன் என்று பற்பல புராண பாத்திரங்கள் அமர்ந்திருக்கின்றனர். பரதன் பேசுகிறான் :

'' 'பரதன்' - என்கிற பெயரில் ஒரு தமிழ்த் திரைப்படம் வெளியாகியிருக்கும் செய்தி வந்து, அதைப் பார்க்கும் பொருட்டே பூலோகம் சென்றிருந்தேன்.''

''வியக்கிறேன் தம்பி. இத்தனை ஆயிரம் ஆண்டுகள் உருண்டும் நம்மை மறக் காமலே இருக்கிறார்களே பூலோக வாசிகள்.''

லக்ஷ்மணன் மகிழ்கிறார்.

''ப்சு!'' - சலித்துக் கொள்கிறான் பரதன்! ''நானும் அப்படி நினைத்தே ஏமாந்தேன் அண்ணா. இது சற்றே வேறுவிதமான கதை.''

''என்ன கதை?'' - எல்லோரிடமும் வியப்பு.

''நம் புராணத்தின் ஒரு வரி உல்டா.''

''உல்டா?!? அப்படியென்றால்?''

''கலந்து கட்டல். உருவல். அஜீஸ் பண்ணுதல்.''

''நீ பேசுவது என்ன மொழி, பரதா?''

''புதுத்தமிழ் அவையோர்களே. சொல் கிறேன், செவிமடுப்பீர்.'' - கண்களைத் துடைத்துக் கொண்டு பரதன் பேச விக்கல், கேவல்களுக்கிடையே வேதனையுடன் வார்த்தைகள் சிதறுகின்றன. அதன் சுருக் கம் : ''ஸ்ரீராமனைப் போல அண்ணன். அவருக்குப் பரதன் போன்ற ஒரு தம்பி. பாசம். அண்ணனுக்குத் துரியோதனன், இராவணன் போன்ற ஒரு எதிரியால் பிரச்னை வருகிறது. அதை எதிர்த்துப் போராடி, சங்கடங்களில் மாட்டிக் கொண்டு அண்ணனை இழந்து...''

''ஆ!'' - என்று நடுக்கிடுகிறது அவை.

''எதிரிகளைப் பழிவாங்கி நிறைவுறு கிறது திரைப்படம்...''

சபையில் கனத்த மௌனம்.

''போர்கள் வருகின்றனவா?'' மெள்ளக் கேட்கிறான் சுக்ரீவன்.

''ஓ! தாராளமாக. நேரடி கைகலப்பு; சிறு போர்கள், பொறிகளுடன் மோதல் என்று முழுக்க முழுக்க யுத்தம், ரத்தம்தான். நடுநடுவே கொஞ்சம் சம்பவங்கள். அதில் ஒரே ஓர் ஆறுதல்...''

''சொல்லு பரதா!''

''மேனகையின் பேத்தி போன்ற ஒரு சிறுமி. பெயர் பானுப்ரியாவாம். அந்த நங்கையின் துடிதுடிப்பு, ஆட்டம் - பாட்டம் தான். வேதனைக்கு நடுவில் எனக்கு ஆறுதலாய் இருந்தது.''

''மற்ற பாத்திரங்கள் பற்றி?''

'' 'பரதனாக' விஜயகாந்த் என்ற ஒரு பேரிளைஞன். நன்கு யுத்தம் புரிகிறார். அழுது துடிக்கிறார். எல்லாம் விழலுக்கு இறைத்த நீராகிறது. அண்ணனாக எஸ். பி. பி. பரவாயில்லை.''

''சின்னக் கதைதானே? உடன் திரும்பி வந்திருக்கலாமே. ஏன் இத்தனை தாமதம்?''

''இந்தப் படத்தின் கதாசிரியர் - இயக் குனரைப் பார்த்துக் கோபத்துடன் பேச விரும்பினேன். தேடி அலைந்தேன். ஒரு வழியாகக் கண்டுபிடித்த போது, 'இம் மாதிரியெல்லாம் படம் எடுப்பவர்களிடம் கோபிப்பது கூட வியர்த்தம்; பேசுவது அனர்த்தம்' என்று தோன்றியது; திரும்பி விட்டேன்.''

– சுந்தர்ஜி

**கடலூர் நகராட்சி :**

# தெருக்களுக்குப் பெயர்ப் பலகைகள்கூட இல்லை!

கடலூர் நகராட்சிக்கு வயது 125. இருபத்தேழு சதுர கி.மீ. பரப்பளவு கொண்ட நகராட்சியின் மக்கள் தொகை ஒரு லட்சத்து நாற்பதாயிரம். நகராட்சியின் ஆண்டு வருமானம் ஒரு கோடியே 96 லட்சம் ரூபாய். செலவு இரண்டு கோடியே ஏழு லட்சம் ரூபாய். வரவுக்கு மீறிச் செலவு செய்து கொண்டிருக்கும் கடலூர் நகராட்சியால் கடலூர் நகரத்தின் மேம்பாட்டுக்கு உருப்படியாய் ஒன்றும் செய்து விட முடியவில்லை என்பது மறுக்க முடியாத உண்மை. பிரச்னைகள் பற்றி நகராட்சி ஆணையாளர் பார்த்தசாரதியைச் சந்தித்துப் பேசினோம்.



பார்த்தசாரதி

"பொதுவாகக் கடலூர் நகரில் குடிநீர் ஒரு பெரிய பிரச்னையாக இல்லை என்றாலும் செம்மண்டலம், சரஸ்வதி நகர், கூத்தப்பாக்கம், காமராஜ் நகர், திருவள்ளுவர் நகர் போன்ற பகுதிகளில் அந்தப் பிரச்னை இருக்கிறதே?"

"புறநகர்ப் பகுதிகள் அதிகரித்துக் கொண்டே போவதால், அப் பகுதிகளின் தேவையை முழுமையாய்ச் சமாளிக்க முடியவில்லை. லாரிகள் மூலம் அனுப்பப்படும் குடிதண்ணீர், போதுமானதாய் இல்லை என்பது நீங்கள் சொல்வதிலிருந்து தெரிகிறது. அதிக லாரிகளில் தண்ணீர் வழங்க ஏற்பாடு செய்கிறேன்."

"இன்னும் பாதாள சாக்கடைத் திட்டம் கொண்டு வரப்படவில்லை. தற்போதுள்ள திறந்த சாக்கடையும், முழுமையாய் நிறை வேற்றப்படவில்லை. ஆங்காங்கே சாக் கடைகள் தேங்கி, கொசுத் தொல்லையும் சுகாதாரக் கேடும் அதிகரிக்கிறதே?"

"பாதாள சாக்கடைத் திட்டம் அவசியம் என்பதை நானும் ஒப்புக் கொள்கிறேன். இது பற்றி வேறு ஒன்றும் சொல்ல முடியாத நிலைமையில் நான் இருக்கிறேன். திறந்தவெளிச் சாக்கடைகள் இல்லாத இடங்களில், அவை அமைக்கும் பணி நடந்து கொண்டுதான் இருக்கிறது. கொசுக்களின் தொல்லைக்குத் திறந்தவெளிச் சாக்கடைகளில் ஏற்படும் அடைப்புகளே முக்கிய காரணம். அவற்றை நகராட்சிப் பணியாளர்கள் ஒவ்வொரு பகுதியாய்ச் சென்று நீக்கி வருகிறார்கள். கொசு உற்பத்திக்கு இன்னொரு காரணம், செப்டிக் டாங்க்குகளில் உள்ள விரிசல்களும், அவற்றிலுள்ள காற்றுப் போகும் குழாய்கள் மூடப்படாமல் இருப்பதும்தான். அவற்றையும் சோதனை செய்து, சம்பந்தப்பட்ட வீட்டாரிடம் டாங்க் விரிசலை சீர்செய்யச் சொல்கிறோம். ஆனால் மக்களின் ஒத்துழைப்பு முழுமையாகக் கிடைக்கவில்லை."

"காமராஜ் பூங்காவின் நிலைமை படுமோசம். அது திறக்கப்படுவதுமில்லை. ஏன் இந்த நிலைமை?"

"ஒரு தனியார் டிப்பார்ட்மெண்டல் ஸ்டோர், அதனைப் பராமரிக்க முன்வந்த போது, நகராட்சி ஒப்புதல் தந்தது. ஆனால் அவர்கள் அதன்பின் இந்த விஷயத்தில் அக்கறை எடுத்துக் கொள்ளவில்லை. இனி நாங்களே அதைச் சீர்செய்து சுப்புராயலு பூங்காவை நன்றாகப் பராமரித்து வரும் நகர சுற்றுச் சூழல் பாதுகாப்பு அமைப்பிடம் ஒப்படைக்கவிருக்கிறோம்."

"இங்கே தெருக்களுக்குப் பெயர்ப் பலகை கூட இல்லை என்பது ஆச்சரியமளிக் கிறது!"

"பெயர்ப் பலகைகள் வைக்கும் திட்டத்தின் முதல் படியாக நூறு தெருக்களுக்கு, இருநூறு பெயர்ப் பலகைகள் ஆர்டர் கொடுத்துள்ளோம். விரைவில் அவை வைக்கப்படும்."

"நகராட்சி மார்க்கெட்டில் அடிக்கடி தீ விபத்து ஏற்படுவதற்கும், அங்குள்ள கடைகளை நகராட்சி ஏலத்துக்கு விடுவதற்கும் தொடர்பு இருப்பதாக மக்கள் பேசிக் கொள்ளுகிறார்களே?"

''மார்க்கெட்டின் ஒரு பகுதியில், நகராட்சியே கடைகள் கட்டி வாடகைக்கு விட்டுள்ளது. இன்னொரு பகுதியில், கடைகள் கட்டி விட நிதி வசதி இல்லாததால், இடத்தை மட்டும் ஏலத்துக்கு விட்டு வருகிறோம். ஏலம் எடுத்தவர்களுக்கும், அங்கே கடை வைத்திருப்பவர்களுக்கும் வாடகை விஷயத்தில் தகராறு. அதனால்தான் அங்கே தீ விபத்தா என்பதெல்லாம் எனக்குத் தெரியாது. கடை வைத்திருப்பவர்கள், ஏலம் எடுத்தவரிடமும் வாடகை செலுத்தாமல், நகராட்சிக்கும் வாடகை செலுத்தாமல் இருக்கிறார்கள். அவர்கள் எந்தவித காம்ப்ரமைசுக்கும் வரத் தயாராய் இல்லை. இதற்கு மேல் நான் எதுவும் சொல்ல விரும்பவில்லை.''

''மக்களிடமிருந்து நூலக வரியை வசூலித்து விட்டு, அதை மத்திய நூலகத்துக்கு நகராட்சி கட்டுவதில்லையாமே! இந்த வகையில் நகராட்சி கட்ட வேண்டிய பாக்கி பன்னிரெண்டு லட்சமாமே?''

''பழைய பாக்கியைக் கட்டுவது இப்போதைக்குச் சாத்தியமில்லை என்றாலும் தற்போது கட்ட வேண்டியதைக் கட்டி விட்டோம்.''







- சீர்காழி வி. ரேவதி

## பொன் விழா ஆண்டு: தங்க நகைப் பரிசுத் திட்டம் - 23

# அடுத்த ஜனாதிபதி!

?

அடுத்த ஜனாதிபதி யார் என்பது பற்றிய ஏகப்பட்ட ஊகங்கள்; வாதப் பிரதிவாதங்களை ஒரு பக்கமாக ஒதுக்குங்கள். அடுத்த ஜனாதிபதியைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பும் உரிமையும் உங்களுக்கே அளிக்கப்பட்டு விட்டதாகக் கொண்டால் யாரைத் தேர்ந்தெடுப்பீர்கள்? ஏன்? 15-20 வரிகளில் சுருக்கமாகத் தபால் கார்டில் எழுதி அனுப்பலாம். சிறந்த தேர்வு, அதற்கு அனுசரணையான சூப்பரான வாதம் - இதற்கு பாலு ஜுவல்லர்ஸ் வழங்கும் ஒரு சவரன் பெறுமானமுள்ள பொன் நகை பரிசு. பிரசுரமாகும் இதர கருத்துக்களுக்கு வழக்கமான சன்மானம். முடிவு தேதி : ஜூலை 8. ''கல்கி காரியாலயம், சென்னை - 600 032'' என்ற விலாசத்துக்கு மட்டுமே எழுதவும். ''சூப்பர் ஜனாதிபதி'' என்று தலைப்பிடுக தரவும்.

"மாவட்டத்தின் தலை நகராக இருந்தும் கடலூரை வளர்ச்சியடைந்த நகரம் என்று கூற முடியாது. ஏனிந்தத் தேக்கம்?'' என்று நாம் பேட்டியைத் தொடங்கும்போதே, கலெக்டர் ராம கிருஷ்ணன், ''அதற்கு அடிப்படைக் காரணங்களாக நான் இரண்டைக் கூறுவேன். முதலாவது, மனோரீதியான காரணம். கடலூர் வாசிகளுக்கு, ''பக்கத்திலே பாண்டிச்சேரி இருக்கிறது. அதனால் நம் ஊர் வளர்ச்சியடையாது'' என்று ஓர் எண்ணமுண்டு. இன்னொரு காரணம், ''கடலூர் முன்னேறவில்லை; வளர்ச்சியடையவில்லை'' என்று ஒரு புறம் குறைபடுவார்கள். ஆனால், இன்னொரு புறம், அந்த முன்னேற்றத்துக்கு, வளர்ச்சிக்குத் தேவையான ஒத்துழைப்பைத் தர மாட்டார்கள்...'' என்று சரளமாகப் பேச ஆரம்பிக்கிறார்.



''மக்களுடைய இந்த அடிப்படையான மனோபாவத்தை நான் மாற்ற விரும்பியதன் விளைவுதான், நகர வளர்ச்சிக்கென்று ஒரு கமிட்டியை உருவாக்கியது. இந்தக் கமிட்டியில் வர்த்தகப் பிரமுகர்கள், வழக்கறிஞர்கள், டாக்டர்கள், ஓய்வு பெற்ற கடலூர் வாசிகள், பத்திரிகையாளர்கள் என்று பல தரப்பினரும் இடம்பெற்றுள்ளனர். நகரத்தின் முக்கிய பிரச்னைகள் பற்றி விவாதித்துத் தீர்வுகள் காண முயற்சிகள் மேற்கொண்டுள்ளனர்.''

''தொழில் துறையில் பின்தங்கிய மாவட்டமாய்க் கருதப்படும் தென்னாற்காட்டில், தொழில் வளர்ச்சி பெருக என்ன திட்டம் வைத்திருக்கிறீர்கள்?'' என்ற நம் கேள்விக்கும் கலெக்டரிடம் பதில் தயாராக இருக்கிறது.

''பண்ருட்டிக்கு அருகே ஆயிரம் கோடி ரூபாய்ச் செலவில் காகிதத் தொழிற்சாலையொன்று அமைக்கப்படவிருக்கிறது. நிலத்தடி நீர் ஆய்வு முடிந்து, சாதகமான ஆய்வறிக்கை சமர்ப்பிக்கப்பட்டு விட்ட நிலையில், ஐ. டி. சி. நிறுவனம், தமிழக அரசுடன் இணைந்து, இந்த காகிதத் தொழிற்சாலையைத் தொடங்கவுள்ளது. இதன் மூலம் நேரிடையாகவும், மறைமுகமாகவும் சுமார் ஆயிரம் பேருக்கு வேலை கிடைக்கும். தென்னாற்காடு மாவட்டத்தின் நீண்ட கடற்கரைப் பகுதியில் உள்ள மீன் வளத்தை முழுமையாகப் பயன்படுத்துவதற்கான திட்டங்களும் நிறைவேற்றப்படுகின்றன. இறால் வளர்ப்பு இங்கே பிரபலமாகி வருகிறது. பணம் கொழிக்கும் இத் தொழில் மூலம் ஏற்றுமதி பெருகி, அந்நியச் செலாவணியும் கிடைக்கிறது.''

'திருப்பாதிரிப்புலியூர் பகுதியிலிருந்து கெடிலம் நதியின் குறுக்கே சென்றால், செம்மண்டலம் பகுதிக்குச் சீக்கிரம் செல்லலாம். அதனால் கெடிலத்தின் குறுக்காக இங்கே ஒரு தரைப் பாலம் அமைத்தால், நகரின் நெரிசல் ஓரளவு குறையும்' என்று பல கடலூர்வாசிகள் கையெழுத்திட்டு நமக்கு அனுப்பியிருந்த கடிதத்தைப் பற்றிக் கூறினோம்.

''கடலூரைச் சுற்றி ஒரு 'ரிங் ரோடு' அமைக்கும் திட்டம் இருக்கிறது. அது நிறைவேறும் போது இந்தப் பாலத்துக்கு அவசியம் சிறிதும் இருக்காது; நகரின் போக்குவரத்து நெரிசலும் குறைந்து விடும்!'' என்று பதில் அளித்தவரிடம், 'காலையில் கல்லூரிக்குச் செல்லும் போது, பஸ்களில் ஏக நெரிசல். ரொம்பக் கஷ்டமாய் இருக்கிறது. ஒரு லேடீஸ் ஸ்பெஷல் விட்டால், 'தேவையில்லாத சீண்டல்களிலிருந்து தப்பிக்கலாம்' என்று கந்தசாமி நாயுடு மகளிர் கல்லூரி மாணவி ஒருவரது கோரிக்கையை நாம் கூறிய போது, அதைக் குறித்துக் கொண்ட கலெக்டர், உடனடியாக லேடீஸ் ஸ்பெஷல் பஸ் விட ஏற்பாடு செய்வதாகக் கூறினார்.

'பொது மக்களுடன் நேரடித் தொடர்பு' என்ற ஒரு நிகழ்ச்சி எல்லா மாவட்டங்களிலும் நடந்து வருகிறது.

அதாவது ஒவ்வொரு மாதமும் மாவட்டத்தின் ஏதாவது ஒரு கிராமத்தைத் தேர்ந்தெடுத்து, மாவட்ட ஆட்சித் தலைவர் அந்தக் கிராமத்துக்கு நேரடியாய்ச் சென்று, அக் கிராமத்திலும் சுற்றுவட்டாரத்திலும் உள்ள மக்களைச் சந்தித்து, அவர்களது குறைகளைக் கேட்டறிந்து அவற்றை தீர்ப்பதற்குரிய நடவடிக்கைகளை எடுக்க வேண்டும். இதனை மாதாந்திரச் சடங்கு போல நடத்தாமல், தென்னாற்காடு மாவட்டக் கலெக்டர் ராமகிருஷ்ணன், அதில் தமது தனி முத்திரையைப் பதித்திருக்கிறார். இது மாவட்ட மக்களிடையே கலெக்டரின் மதிப்பை உயர்த்தியுள்ளது. அப்படி என்ன செய்திருக்கிறார் என்கிறீர்களா?

கலெக்டர் வருவதாக அறிவிக்கப்படும் நாளுக்கு முந்தைய இரவே அந்தக் கிராமத்துக்கு மாவட்ட காவல்துறை அதிகாரியுடன் போய் விடுகிறார். பந்தா ஏதுமின்றி, கிராமத்து ஆரம்ப சுகாதார நிலையம் அல்லது பள்ளிக்கூடம் என்று எதிலாவது தங்குகிறார். இரவோடு இரவாக ஊர்ப் பிரமுகர்களுடன் பொதுவான பிரச்னைகள், அதற்குக் காரணம், அதற்குரிய தீர்வுகள் என்று அனைத்தையும் பற்றி விவாதிக்கிறார். காலையில் எழுந்ததும், சப்தம் போடாமல், எஸ்.பி.யும், கலெக்டருமாய், சாதாரண உடையில் (வேட்டி அல்லது லுங்கி, சட்டை) சைக்கிளை எடுத்துக் கொண்டு, ஐந்தாறு கிராமங்களுக்கு ஒரு ரவுண்டு போய் வருகிறார்கள்!

அந்த அனுபவத்தை விவரிக்கிறார் கலெக்டர் ராமகிருஷ்ணன் : ''மிட்டா மண்டகப்பட்டு என்ற ஊருக்குப் போயிருந்தேன். ஒரு டீக்கடையில் டீ வாங்கிக் குடித்த போது, அங்கே இருந்த ஒரு பெரியவர் என்னைப் பார்த்துக் கேட்டார்.... 'தம்பிக்கு எந்த ஊரு?' நானும், ரொம்ப சாதாரணமாய்ப் 'பாண்டிச்சேரி' என்று கூறிவிட்டு, மேலும் பேச்சுக் கொடுத்து, 'கலெக்டர் வந்திருக்கிறாராமே பக்கத்து ஊருக்கு. நீங்க போய் உங்களுக்கு ஏதாவது குறை இருந்தாச் சொல்லலாமே!' என்றேன். அவரும், வேறு சிலரும், தண்ணீர் வசதிக்காக போர் வெல் தோண்டப் பண உதவி கேட்டு வந்தனர். அப்போது, தங்கள் ஊரில் வந்து டீக்கடையில் டீ வாங்கிக் குடித்தபடி பேசியவர் கலெக்டர்தான் என்று அறிந்த போது, அவர்களுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை!

''சைக்கிளில் காலையில் ரவுண்டு கிளம்பும் போது, அதிக அளவில் அரிஜன காலனிகளுக்குத்தான் போகிறேன். அங்கேயும் நான் யார் என்று கூறிக் கொள்ளாமல், கலெக்டர் ஆபீஸில் வேலை பார்க்கிறவர் என்று சொல்லி, 'என்னோடு வாருங்கள், கலெக்டரைச் சந்திக்கலாம்' என்று கூடவே அழைத்துக் கொண்டும் வந்திருக்கிறேன்!

# இவர் ஒரு "டீக்கடை கலெக்டர்!"

''முதியோர் பென்ஷன் வேண்டும் என்று மனு தரும் முதியவர்களிடமிருந்து, மனுவைப் பெற்ற மறுநிமிடமே, அதிகாரிகளை அனுப்பி, விசாரணை செய்து, பென்ஷன் அளிக்க உத்தரவு போடுகிறேன். அப்போது அந்த முதியவர்களின் சந்தோஷமும், நன்றி கலந்த உணர்ச்சிபூர்வமான பார்வையும் என் நெஞ்சில் என்றும் நிலைத்திருக்கும். இதே போல பட்டா வழங்கும் கேஸ்களும் உடனடியாகப் பைசல் செய்யப்படுகின்றன.''

'' 'டீக்கடை கலெக்டர்' என்று கூட மக்கள் உங்களை அன்புடன் வர்ணிக்கிறார்கள்! இப்படியெல்லாம் நீங்கள் மக்களுடன் சாதாரணமாகச் சென்று பழகுவதற்குக் குறிப்பானதொரு காரணம் இருக்கிறதா?''

''பேப்பரைப் புரட்டினால், இங்கே போராட்டம்; அங்கே தர்ணா என்று நிறையச் செய்திகள் வருகின்றன. தண்ணீர்ப் பிரச்னையென்றால் பெண்கள் பானைகளைக் கொண்டு வந்து உடைக்கிறார்கள். பஸ் வசதியில்லையெனில் சாலை மறியல்.



ட்ரூமன் ஜனாதிபதி ஆனதும் அவரது தாயாரைப் பார்த்து ஒரு பிரமுகர், 'நீங்கள் உங்கள் மகனை எண்ணிப் பெருமைப்படலாம்' என்று பாராட்டினார். அதற்கு ட்ரூமனின் தாயார், 'உண்மைதான். அதே அளவுக்கு அதோ வயலில் உழுது கொண்டிருக்கும் என் இரண்டாவது மகனைக் குறித்தும் பெருமைப்படுகிறேன்' என்றார்.

- தக்கோலம் அ. முஸ்தபா

இதற்கெல்லாம் என்ன காரணம்? இந்த அரசாங்கம், அரசு இயந்திரம் இவற்றின் மேலெல்லாம் படிப்படியாக மக்களுக்கு நம்பிக்கை குறைந்து வருகிறது. அதனால் ஏற்படும் தங்கள் அதிருப்தியையும் கோபத்தையும்தான் இப்படி அவர்கள் வெளிப்படுத்துகிறார்கள்; அரசு இயந்திரத்தின் அங்கமான அதிகாரிகளை வெறுப்புடன் நோக்குகிறார்கள். தங்களுக்கும், அதிகாரிகளுக்குமிடையே பெரிய இடைவெளி உள்ளதாக நினைக்கிறார்கள்.

''இதையெல்லாம் மாற்றி, மக்களில் ஒருவர்தான் கலெக்டரும் என்ற எண்ணத்தை ஏற்படுத்த விரும்புகிறேன் நான். கிராமத்திலேயே இரவு தங்கி, அங்கே உள்ள டீக்கடையில் அவர்களுள் ஒருவனாக நான் டீ குடிக்கும் போது இடைவெளி குறைகிறது. இதைப் பார்க்கும் கீழ்மட்ட அதிகாரிகளான துணை கலெக்டர், தாசில்தார், பி.டி.ஓ. போன்றவர்களும் 'கலெக்டரே இப்படிச் செய்கிறாரே' என்ற கட்டாயத்தின் காரணமாகவாவது, மக்களை நெருங்குவார்களென்று நம்புகிறேன்!''

பேட்டி : எஸ். சந்திரமௌலி

கடலூரர் தொடர்பான வண்ணப் படமும் மற்ற படங்களும் : யோகா

---

உஷ்.. காமிக்ஸ் படிச்சுட்டு இருக்கேன்ல, தொந்தரவு பண்ணாதே. அமைதி உன்னோடை.

இங்க வா, வாக்கிங் போகும் போது என் பின்னாலதான் வரணும்னு எத்தனை தடவை சொல்லியிருக்கேன்

என்னைக் கேக்காம விளையாடக் கூடாதுன்னு சொல்லியிருக்கேன்ல!

போர் அடிக்குது

எதிர்த்துப் பேசாதே.

நான் என்ன தமிழ்நாடு காங்கிரஸ் தலைவரா, நீ என்ன முதல்வரா நீ சொல்றபடியெல்லாம் நான் ஆடறதுக்கு?



பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதரவர்களால், 1542-இல் ஸ்தாபிக்கப்பட்டு, தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 90 மாணாக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒரு நாள் உணவளிக்க, உணவு வகையினை அனுசரித்து சுமார், முறையே ரூ.300/- அல்லது 500/- ஆகிறது. இந்தத் தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ. 3000/- அல்லது 5000/- மூலதனம் ஏற்படுத்தியோ, அவ்வப்போது தொகை அனுப்பியோ, ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம். நன்கொடை அனுப்பவேண்டிய பெயரும் முகவரியும்:

**அத்வைத வித்யாசார்யா மஹாராஜா ஸாஹேப் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி,**
**D-76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி,**
**கும்பகோணம்—612 001.**

****** இந்த நன்கொடைக்கு 80-G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு ******

## வேத வைதிக நூல்கள் (விலை தபால் செலவு உட்பட)

**I**
1. ரிக்வேத ஸம்ஹிதா - நாகராக்ஷரம் - 10 மண்டலங்கள் - ரூ. 365/-
2. யஜுர்வேத ஸம்ஹிதா - நாகராக்ஷரம் - 7 காண்டங்கள் - ரூ. 165/-
3. ஸாமவேத ஸம்ஹிதா - க்ரந்தாக்ஷரம் - 2 பாகங்கள் (முதல் பாகம் - ரூ. 185/-, இரண்டாம் பாகம் - ரூ. 210/-)
4. ஸாமவேத அஷ்டப்ராம்மணம் - நாகராக்ஷரம் - 3 பாகங்கள் (முதல் பாகம் - ரூ. 210/- இரண்டாம் பாகம் - ரூ. 110/- மூன்றாம் பாகம் - ரூ. 85/-
5. ஸாமவேத பூர்வாபர ப்ரயோகம் - க்ரந்தாக்ஷரம் - ரூ. 80/-

**II கிரந்தாக்ஷரத்தில் காரிகையுடன் பிரம்மஸ்ரீ முத்துச்ரௌதிகளால் பதிப்பிக்கப்பட்ட கிரந்தங்களின் மறுபதிப்புகள்**

1. போதாயன பூர்வாபர ப்ரயோகம் - ரூ. 95/-
2. ஆபஸ்தம்ப பூர்வாபர ப்ரயோகம் - ரூ. 90/-
3. ஆபஸ்தம்ப ச்ராத்த ப்ரயோகம் - ரூ. 55/-
4. ஆச்வலாயன பூர்வாபர ப்ரயோகம் - ரூ. 85/-
5. ஆச்வலாயன ச்ராத்த ப்ரயோகம் - ரூ. 50/-
6. கல்ப சிந்தாமணி - ரூ. 55/-

**III**
1. மனாசேச்லோக - ராமமந்த்ராசே ச்லோக - ரூ. 25/- (மராத்தி மூலம் தமிழ் பதவுரை)
2. ஸ்ரீ ராதாகிருஷ்ண பூஜாவிதானம் - ரூ. 25/- (ஸம்ஸ்கிருதமூலம் - தமிழ் பதவுரை)
3. நளோதந்தம் - நைஷதகாவ்யத்தின் சுருக்கம் - ரூ. 25/- (ஸம்ஸ்கிருத மூலம் - ஆங்கில பதவுரை)
4. வடமொழிச் சொற்கடல் - ஸம்ஸ்க்ருதம் - தமிழ் Dictionary ரூ. 80/-
5. வேதபாட வழிமுறை (syllabus) ரிக், யஜுர், ஸாம - ரூ. 25/-

V.P.P. யில் அனுப்புவதில்லை. முழுத்தொகையையும் M.O. (or) Draft மூலம் கீழே குறிப்பிட்டுள்ள முகவரிக்கு அனுப்பவும். செக் மூலம் அனுப்ப வேண்டாம்.

பிரஸிடெண்ட் & டிரஷரர் - A.V.M.S.G.D.P.S. சமிதி, D-76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர்காலனி, கும்பகோணம் - 612 001.

நேரில் வாங்க விரும்புவோர் கீழ்க்கண்ட விலாசத்தில் பெற்றுக் கொள்ளவும் ராஜா வேத காவ்ய பாடசாலை, யாகசாலை தெரு (சக்கரை படித்துறை அருகில்) கும்பகோணம் - 612 001.

நீங்கள் கேட்டவை - தராசு

# ஜெயலலிதாவின் சம்பத்திய சிக்கனத்தனம்?



'சிக்கன சிகாமணி'

● கே. பாலமுருகன், சித்தாத்தூர்.

*? இத்தனை எதிர்ப்பையும் கடந்து, பதவியை விட்டு விலகாதிருக்கும் பங்காரப்பாவைத் திறமை மிக்கவர் என்பதா? இல்லை...*

! மத்திய அரசு மைனாரிட்டியாக இருப்பதில் பலருக்கு அதிர்ஷ்டம். அவர்களில் பங்காரப்பாவும் ஒருவர்.

● எம். ஜெயலக்ஷ்மி, மதுரை.

*? திரைப்படங்களில் நகைச்சுவைக் காட்சிகளை ரசித்து இருக்கிறீர்களா?*

! பழைய படங்களில் சிலவற்றை டீவியில் பார்க்க நேரும் போது.

● காசு, ஒண்டிப்புதூர்.

*? இந்த வருடம் அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி இல்லையா?*

! அதற்குப் பதிலாகத்தான் பொன் விழா நாவல் போட்டி எங்களை உறங்க விடாமல் செய்து கொண்டிருக்கிறதே!

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

*? மதுவிலக்குப் பிரசாரத்துக்காக அரசே திரைப்படம் எடுப்பது ஒருபுறம்; விஸ்கி பிராந்தி கடைகளுக்கு பார் வைத்துக் கொள்ள அனுமதி மறுபுறம். - தமிழக அரசின் உண்மை முகம் எது?*

! உண்மை முகம் என்பதே இன்றைய அரசியலில் இருப்பதாகத் தெரியவில்லை. எல்லாமே பொய்முகங்கள்தாம். எல்லாவற்றிலும் கோல்மால்தான்.

● வி. பரமசிவம், மதுரை.

*? 'மத்திய அரசு அனுமதித்தால் ஒரு வாரத்தில் விடுதலைப் புலித் தலைவரைப் பிடித்து வந்து விடுவேன்'' என்கிறாரே, சுப்பிரமணிசுவாமி?*

! அப்படி ஓர் அனுமதியை மத்திய அரசு வழங்க முடியாது, ஒரு தனிமனிதருக்கு என்ற தைரியத்தில்தான் சொல்கிறார்.

☐ ரூ. 25 பரிசு பெறுபவர் :
ஐ. முனியன்,
காந்தி நகர்,
சின்ன சேலம் (போஸ்ட்)
கள்ளக்குறிச்சி (வட்டம்)
தெ. ஆ. 606 201.



பிரபாகரன் என்ன இவருடைய ஜிப்பா பாக்கெட்டிலா குடியிருக்கிறார்?

● அ. முஸ்தபா, தக்கோலம்.

*? புத்தகங்கள் அதிகம் படிப்பதால் ''மென்டலி அஃபெக்ட்'' ஆகுமா?*

! நிச்சயம் அஃபெக்ட் ஆகும். ஆரோக்கியமான முறையிலா, ஆபத்தான விதத்திலா என்பது படிக்கும் புத்தகங்களைப் பொறுத்தது!

● மல்லிகை மன்னன், மதுரை.

*? 'கலைத்தாயின் தவப் புதல்வியான புரட்சித் தலைவியின் ஆட்சியில் எனக்கு எந்தக் குறையுமில்லை. அ. தி. மு. க. விலிருந்து வெளியேற நான் என்ன அடி முட்டாளா?'' என்கிறாரே ஆர். எம். வீ.?*

! இப்படி கிண்டல் என்று கருதப்படக் கூடிய விதமாகப் பேசப் போய்த்தானோ என்னவோ அமைச்சர் பத வியும் அம்பேல் ஆகிவிட்டது!

● இரா. மாதவராமன், கிருஷ்ணகிரி.

*? பஞ்சாபில் அரசு அலுவலகங்களில் புகைபிடிக்கத் தடையாமே?*

! வெளியே போனால்தான் துப்பாக்கிப் புகையையும் குண்டுப் புகையையும் சுவாசிக்க வேண்டியிருக்கிறது; அலுவலகத்திலாவது புகையற்ற சூழலை உருவாக்கலாமே என்பதற்காக இருக்கலாம்!

● கே. காளிமுத்து, எருமகுளம்.

*? டெல்லி நாடாளுமன்ற இடைத் தேர்தலில் பூலான்தேவி நிற்பது குறித்து?*

! பீகாரிலும் உத்தரப்பிரதேசத்திலும் தமக்கு முன்னுதாரணங்களாகப் பல எம். எல்.ஏக்கள் இருப்பது பூலான்தேவிக்கு ஊக்கமளித்திருக்கலாம். அவர் சார்ந்துள்ள பகுஜன் சமாஜ் கட்சி, காங்கிரஸ், பி.ஜே.பி., மற்றும் ஜனதா தளத்துடன் இவ் விஷயத்தில் போட்டி போடுவதாக இருக்கலாம். எல்லாருக்கும் பாடம் கற்பிக்கும் சக்தி மக்களிடம் இருக்கிறதே!

● பூங்குழலி, கெங்கவல்லி.

*? ஸ்ரீபெரும்புதூரில் ராஜீவ் நினைவுச் சின்னத்துக்கும் 'ராஜீவ்புரம்' என்று*



கிண்டலுக்குப் பரிசு?



அதிர்ஷ்டம்!



ஜிப்பா பாக்கெட்டும்...

*பெயரிடுவதற்கும் ஜீயர் கடும் எதிர்ப்புத் தெரிவித்திருப்பது பற்றி?*

! ராஜீவ் புகழ் பரப்புவதை அவர் எதிர்க்கவில்லை; அதற்காக ராமானுஜரை மிதிக்க வேண்டுமா என்றுதான் கேட்கிறார். கோயில் நிலத்தை விட்டால் அப்பால் ஏராளமாய்ப் புறம்போக்கு நிலம் உள்ளது. அதில் கணிசமான பகுதியை எடுத்து, ராஜீவ்புரம் என்ன, ராஜீவ் மாநகரமே உருவாக்கலாம்; நினைவுச் சின்னம் எழுப்பலாம், அவர் ஆட்சேபிக்கவா முடியும்?

● பி. ஜீவானந்தம், ஈச்சங்குடி.

*? அரசு மருத்துவமனை பலவற்றிலும் நோயாளியே எல்லா மருந்துகளையும் பான்டேஜ் துணி, பஞ்சு உட்பட வாங்கித் தரும் அவலத்தை யாரிடம் கூறுவது?*

! ஒருமுறை மட்டுமே பயன்படுத்த வேண்டிய ஊசிகளைத் திரும்பவும் கொதிக்கக் கூட வைக்காமல் பயன்படுத்துவது; பிரசவ வார்டில் தாய்மார்கள் தரையில் படுத்தபடி பிள்ளை பெறுவது; வார்டுகளில் டீவியை அலற விட்டு நோயாளிகளைச் சிப்பந்திகள் அவதிக்குள்ளாக்குவது, 'வார்ட் பாய்'கள் குடித்து விட்டுப் பணிக்கு வருவது - இதெல்லாம் நடக்கும் சென்னை ஆஸ்பத்திரிகளைப் பார்க்க, உங்கள் பாடு எவ்வளவோ தேவலாம் என்று ஆறுதல் அடைக!

● கே. சத்தியநாராயணன், வேலூர்.

*? மீண்டும் வாரியத் தலைவர்களாக அரசியல்வாதிகளே வந்து விட்டார்களே?*

! வாரிக் கொள்ளத்தான்!

● அ. க. கிருஷ்ணன், சென்னை.

*? ஜெயலலிதாவின் சமீபத்திய சிக்கனத் தனம்?*

! ஊட்டி மாளிகை ரிப்பேர் செலவு 60 லட்சம் அல்லவாம்; ஆறு லட்சம்தானாம்! 'சிக்கன சிகாமணி' என்று பட்டமே தரலாம்!

● ஐ. முனியன், சின்னசேலம் ❑

*? ஆராய்ந்தறிவதற்கும் சிந்தனை செய்வதற்கும் உள்ள வேறுபாடுகள் என்ன?*

! தேசிய முன்னணி ஆட்சியில் அமுல் படுத்தப்பட்ட விவசாயிகள் கடன் ரத்து திட்டம் பற்றிச் சட்டசபையில் பேசிய முதல்வர், தாம் சரியான விவரங்களைத்தான் தருகிறோமா என்பதை ஆராய்ந்து பார்த்திருக்க வேண்டும்; செய்யவில்லை. ஒரு முன்னாள் பிரதமரைப் (வி. பி. சிங்) பற்றி 'ஏமாற்று வேலை செய்தவர்' என்பதாக இழிவாகப் பேசலாமா, சிந்தித்திருக்க வேண்டும். அதையும் செய்யவில்லை. இப்போது, 'முதல் வருக்குத் தவறான தகவல் தந்த அதிகாரி தண்டிக்கப்படுவார்' என்று அமைச்சர் அறிவிக்கிறார். ஆனால் ஆராய்ந்தும் பாராத, சிந்திக்கவும் செய்யாத, தவறுக்கு வருந்துவதாகக் கூறவும் துணிவில்லாத ஆணவத்துக்கு என்ன தண்டனை?

● எஸ். நாரம்புநாதன், கரண்டை.

*? சமீபத்தில் உங்களை அதிர்ச்சி அடைய வைத்த நிகழ்ச்சி?*

! ஐ. ஏ. எஸ். அதிகாரி சந்திரலேகா மீது திராவகம் வீசப்பட்டதுதான். காரணம் தெரியவில்லை; என்ன விரோதம் புரியவில்லை. விசாரணையில் தெளிவாகலாம். என்னவாயிருந்தாலும் திராவகம் வீசுவது என்பது கொலை முயற்சியை விடக் கொடிய செயல். கடும் தண்டனைக்குரியது.

● டி. எஸ். டி. ராயன், சென்னை – 33.

*? வெற்றியின் முதல் படி தோல்வி என்றால் தோல்விக்கு முதல் படி எது?*

! கட்-அவுட் உருவ(க)ச் சரிவு!

கடும் எதிர்ப்பு!





பட்டு உற்பத்தி

## அட, அப்படியா!

# வார்த்தைகளே இல்லாத தேசிய கீதங்கள்!

!! உலகின் மிகப் பழைய அணைக்கட்டு ஜார்டனிலுள்ள 'ஜாவா' என்னும் இடத்தில் உள்ளது. கி. மு. 3200 ஆம் ஆண்டில் கட்டப்பட்டதாகக் கூறப்படும் இந்த அணைக்கட்டை 1974 இல் பிரிட்டிஷ் ஸ்கூல் ஆஃப் ஆர்கியாலஜி, அகழ்வாராய்ச்சியின் போது கண்டுபிடித்தது.

!! கி. பி. 1000 முன்பிலிருந்தே ஹிந்து மதத்தவர்கள் பிளாஸ்டிக் சர்ஜரி செய்யும் முறையை அறிந்திருந்தார்கள். திருமண பந்தத்துக்கு வெளியே உறவு கொள்வோருக்கு 'மூக்கறுப்பு' தண்டனை விதிக்கப்படும் வழக்கம் அப்போது இருந்தது! அப்படி மூக்கறுபட்டவர்களுக்குக் கன்னம், நெற்றிப் பகுதியிலிருந்து சதை எடுத்து மூக்கை மீண்டும் உருவாக்கும் கலை, சர்ஜன்களுக்குத் தெரிந்திருந்தது. ஆபரேஷன் சமயத்தில் நாசித் துவாரங்களில் நாணல் குழாய் களைப் பொருத்தி மூச்சுவிட வழி செய்தார்கள்! நவீன பிளாஸ்டிக் சர்ஜரி முறை மேற்கத்திய நாடுகளில் பிரபலமானது, முதல் உலக யுத்தத்தின் போது தான்.

!! மல்பெரி மரங்களில் பட்டுப் புழுக்களை வளர்த்து, அவற்றிடமிருந்து பட்டு இழை பெற்றுத் துணியாக நெய்யும் கலை சைனாவில்தான் தோன்றியது. இக்கலையை அறிமுகப்படுத்தியவர் Lady Hsi-Ling-Shi. இவரைப் 'பட்டு தெய்வமா'கவே வணங்கினர் சீனர்கள்.

!! பல காலம் முன், கடவுளர்களின் சன்னதியில் பலி கொடுக்கப்பட்ட விலங்குகளின் உடலிலிருந்து வெளிப்பட்ட கொழுப்புச் சத்து, அருகே எரிந்த தீயின் சாம்பலுடன் கலந்த போது தற்செயலாக 'சோப்' கண்டுபிடிக்கப்பட்டது!

!! கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் ரோம் நாட்டுப் பொறியியல் நிபுணர்கள் ஸ்பெய்ன் தேசத்தில் கட்டுவித்த இரண்டு அணைக்கட்டுக் கள் இன்னும் உபயோகத்தில் உள்ளன. கடந்த சுமார் 1800 ஆண்டுகளில், இந்த அணைக்கட்டுகளின் கல் முகப்பு ஒரே ஒரு முறை மாற்றப் பட்டதன்றி, வேறு பழுது பார்க்கும் அவசியமே ஏற்படவில்லை!

!! கடந்த 3500 ஆண்டுகளில் உலகின் நாகரிகமடைந்த பகுதிகளில் முழுக்க முழுக்க அமைதி நிலவியது 230 ஆண்டுகளுக்கு மட்டுமே!

!! மிக நீண்ட தேசிய கீதம் கிரேக்க நாட்டினுடையது. 158 அடிகள். (பத்திகள்) நான்கே வரிகளிலான உலகின் மிகச் சிறிய தேசிய கீதங்கள், ஜப்பான், ஜார்டன், ஸான் மரீனோ ஆகிய நாடுகளினுடையவை. பஹ்ரேய்ன் மற்றும் குவட்டார் நாட்டுத் தேசிய கீதங்களில் வார்த்தைகளே கிடையாது! மெட்டு மட்டும்தான்.

!! உலக நாடுகளின் கொடிகளில் மிக அதிகமாக இடம்பெறும் சின்னம் நட்சத்திரம். நாற்பத்தொரு கொடிகளில் இது இடம்பெறுகிறது. அடுத்த இடத்தைப் பெறும் பிறைநிலவு ஒன்பது கொடிகளில் தான் இடம்பெறுகிறது.

தொகுப்பு : உதய்லால்

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை - 600 032. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

# அழகொளிரும் மேனி. ஸின்தால் சாண்டல் மேனி.

இப்போது நீங்கள் ஸின்தால் சாண்டல் மூலம் பெற்றிடலாம் குறைபாடற்ற, மாசிலா மேனியை. ஸின்தாலில் மட்டுமே உண்டு – மேனியில் மாசு மற்றும் துர்நாற்றத்தை உண்டாக்கும் பாக்டீரியாவை அழிப்பதற்கான TCC. மென்மையான, அழகொளிரும் மேனிக்கு தொன்றுதொட்டு பயன்படுத்தப்பட்டுவரும் சந்தனத்தின் நன்மைகள்.

**இன்றைய நங்கையர்க்கான இன்றைய சாண்டல் சோப்.**



REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka







## ஹோம் கலெக்ஷன்

**பாலிகாட் விரிப்புகள்**

மிருதுவானவை மற்றும் சுருக்கம்
இல்லாதவை. பகட்டான ப்ளெயின்களில்
மற்றும் பரவசமூட்டும் ப்ரிண்டுகளில்.

**அல்ட்ராக்ஸ் துவாலைகள்**

சொகுசான, மிருதுவான மற்றும் அதிக
ஈர்க்கும் தன்மையுடன் கூடிய பளிச்சிடும்
பல வண்ணங்களில்.

**ஃபர்னிஷிங் துணிகள்**

தூய பருத்தி மற்றும் பாலியெஸ்டர்
இணைந்தவை. வசீகர ப்ரிண்டுகள்...
பல்வேறு வண்ணங்களில்.

**பாம்பே டையிங்**
ஸ்தாபிதம் 1879